உ

கடவுள்துணை.

# மன்மதநாடகம்.

உறந்தைமாநகர்

திருமலைதாசரவர்கள்.

இயற்றப்பட்டது.

இஃது.

தி-கந்தசாமிபிள்ளை

யவர்களால்பார்வையிட்டு,

திரிசிரபுரம்புத்தகவியாபாரம்.

தி-சபாபதிபிள்ளை

யவர்களது.

மட்டுவார்குழலாம்பாள் அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

சிந்தாத்திரிப்பேட்டைசாமிநாயக்கர்வீதி.-௭௮-நெர்-

யுவ௵-கன்னிரவி.

உ

கணபதி துணை.

இதனால்சகலமானவர்களுக்கும் அறிவிப்பதுயாதெனில் சென்னப் பட்டணம் குஜிலிக்கடை ஸ்ரீகந்தசுவாமி ஆலயத்தைச்சேர்ந்த கீழண்டைபக்கங்கடையில் புஸ்தகஷாப்பு வைத்திருக்கும்-தி - கந்தசாமி பிள்ளை யவர்களாலும்திருச்சிறுப்பள்ளிகோடிகடை வீதியில் புஸ்தக வியாபாரம் - தி - சபாபதிபிள்ளை கடையிலும் தமிழ்-தெலுங்கு-இங்கிலீஷ்- புத்தகங்களும்- அகஸ்தியர்முதலானோரருளிய அடியிறகண்ட வாகடஞானசாத்திரங்களும் விற்பனைசெய்து வருகிறபடியால் வேண்டியவர்கள் வாங்கிக்கொள்ளலாம்.

புத்தகவிபரம்,

| | | | |
|---|---|---|---|
| அகத்தியர் சிவகுளிகை | அ | திருமூலர் எண்ணெய் | அ |
| ,, சூத்திரம் | ரு | ,, நாதாந்தகுறிப்பு | கக |
| ,, வகாரம ,, | க0 | ,, ஞானோபதேசம் | ௩0 |
| ,, வழலை ,, | கஉ | கொங்கணர் குளிகை | அ |
| ,, அதிசயம் ,, | உஎ | ,, பூஜாவிதி | ௩0 |
| ,, முப்பூ ,, | க0 | மச்சமுனிவர்கியாழம் | அ |
| ,, ,, ,, | கரு | நதிரர்குளிகை | அ |
| ,, சோதிமணி ,, | அ | புலிப்பாணி ஜமிழ்வித்தை | உரு |
| ,, குருக்கிடை ,, | ௩ரு | வாலை-வயித்தியக்கும்மி | |
| ,, தர்க்கசங்கிரகம் | கரு | போகர்சடலைசூத்திரம் | |
| ,, வைத்யமுறை | ௩ச | அடுக்குநிலைபோதம் | |
| ,, மதிவெண்பா | ௱ | வெங்கைக்கோவை | |
| ,, பச்சைவெட்டு | கரு | திருச்சிற்றம்பலக்கோவை | |
| ,, பக்ஷணி | க௩ச | ஒருதுறைக்கோவை | |
| ,, கேசரிகுருநூல் | ரு0 | காஞ்சி ஏகாம்பரநாதருலா | |
| ,, குருநூலமுப்பு | ரு0 | மீனாட்சியம்மன்பதடி | |
| ,, முப்பூ | ௩0 | திருவேங்கடமாலைபதவுரை | |
| ,, ஞானம் | ௩0 | ஆத்திசூடி பதவுரை | |
| " ,, | கச | கொன்றைவேந்தன்பதவுரை | |
| " ,, | க௩ | வாக்குண்டாம்பதவுரை | |
| ,, ,, | அ | நல்வழிபதவுரை | |
| ,, சஞ்சீவிவெண்ணெய் | | அழகர்பிள்ளைத்தமிழ் | |
| ,, கக்கிஷம் | ரு | நக்கீரர்விநாயகரகவல் அர்ச்சனையுடன் | |
| தெக்ஷிணாமூர்த்திகேசரி | அ | சாமுத்திரிகாலக்ஷணம் | |
| ,, வகாரசூத்திரம் | க0 | புருடசாமுத்திரிகாலக்ஷணம் | |
| ஆணிக்கோவை | ருக | திருவிளையாடலம்மானை | |
| திருவகுப்பு | ௩உ | சமயாசாரசங்கிரகம் | |



உ

கடவுள் துணை.

# மன்மத நாடகம்.

## விநாயகர் துதி.

காப்பு.

வெண்பா.

பூமேவுமாமதனன் போர்சிவன்மேற்செய்தகதை
பாமேவுஞ்செந்தமிழாற்பாடுதற்கு-காமேவுஞ்
சுந்தரத்தந்தி துதிக்குமொருமருப்புக்
கந்தரத்தைந்துகரன் காப்பு.

## சிவன்-உமை-திருமால்-மன்மதன்-இவர்கள் துதி.

விருத்தம்.

கார்ப்பவன்சச்சிநாதன் கழலிணைதன்னைப்போற்றி
பார்ப்பதிபஞ்சவன்னப் பரமனுமையுமேபோற்றி
வார்க்கச்சுமுலையிலக்குமி மணவாளன்திருத்தாள்போற்றி
தீர்க்கனுமதனவேளின சிற்றடிவணங்குவோமே.

## முருகர்துதி.

துள்ளினனிந்திரன்வேத னமைந்தவப்படியேகூடி
புள்ளிமான்மழுக்கையத்தர் பொற்புறுமிமையவெற்பில்
தெள்ளியமவுனமான தெகஷணாமுகூர்த்தநீங்கி
வெள்ளியங்கிரியான்கந்த வேளனையருளத்தானே-

இதுவுமது.

அருள்பெறுகந்தன்கைக்கூர் அயிலினலரக்கர்மாளப்
பொருள்பெறுமயிலிலேறிப் பூவலஞ்செய்தவோனே

தெருள்பெறுமறிவுண்டாகத் திருப்பயர்க்கியின்மேவும்
இருள்பெறுகூந்தல்வள்ளிக்கிறைவனைப்போற்றுவோமே.



### இந்நூலியற்றியோன்பெயர்.

வணங்குவோமுறநகைச்சாமிநாதனார்மலர்ப்பாகத்தில்
மணங்கொளுமலைச்சூடி வருந்திருமலைக்குத்தாசன்
இலங்கமேவமறவர்யாரு மிசைப்படிபுகழ்வதாக
அனங்கருணாசலேச புராணத்திலள்ளினனே.
போற்றுவோஞ்சகலநீதி புராணங்கள்பலவுமாய்ந்து
தேற்றமையுடையசாமி நாதன்சீரடியெந்நாளு
மாற்றமில்மகிழ்ச்சியோடு வணங்கியேபரவுகின்ற
சீற்றமிலதிருமலைக்குத்தாசனுஞ் செப்பினனே.

செப்பினன்தெய்வகோத்திரத் திலகராய்ப்புவியில்வந்த
மற்பொருபுய ரான மறவர்கள்மகிழ்ச்சியோடு
இப்புவிபுகழுங்காம நாடகமியம்பாயென்னச்
செப்பமாய்திருமலைக்குத் தாசனுஞ்செப்பினனே.

### மன்மதனுதித்தநாள்.

### விருத்தம்.

மன்மதவருடமாதி வளம்பெறுஜயவீறாக
இன்புறுமறுபதற்கு னொழில்விஜயாண்டில்மாசி
யன்புறுமம்மாவாசை யடுத்ததோர்மூன்றுநாளிற்
றெஞ்சித்துபிறையிற்றானே சித்தசனுதித்தாமே.

### அவையடக்கம்.

### விருத்தம்.

வாரினீர்முகிலைச்சேர்ந்தால் வையத்தோருண்ணுநன்னீர்
மாரினீர்சார்ந்துசால கத்தினில்வாவிக்கேகும்
பாரினிலெளியேன்சொல்லிற் பகர்குற்றமுற்றபோதுஞ்
சீரியர்செவியிற்சென்றாற் றிதநிக்குந்தேனதாமே.

### தோடையம்.

இராகம்-நாட்டை-திரிபுடைதாளம்.

பூவுலவுமதிமுகமாது பொற்பததாமரையைப்போற்றி
நாவுலவுங்கலைமகள்பாதம் நானுமறவேனே-ஆ-ஆ
தேவுலவுஞ்சிரகிரிமேவுஞ் செல்வவிநாயகனருளாலே
மாவுலவுஞ்சூரனைவென்ற மயூரன்பதந்துணையே-ஜெய-ஜெய
அரிவையர்படைகுடை அப்புலித்தோர்
அசைசிறுகுளிர்குதி னாகள்கிளிகள்

விரிகமுகமலர் கவரிகள்வீசும்
வேள்கதையைப்பாட ஆ-ஆ
பரிமளவசந்தன்மந் திரியாக
பகர்கடலொலிபே ரிகைபோட
கரியிருள்படைவீ டுகள்சோலை
காமன்கதைபாட ஜெய-ஜெய

மாவுலவுமரிமகவான் மதனாடகமதுபாட
பூவுலகினில்மறவர்கள்வாழ்க புரிந்தனன்சயயோக-ஆ-ஆ
ஆவுலவுங்கணபதிபோக ஆவலுறுமனையோடுமோக
பாவலர்களதிவிவேகம் பாரிற்பெறுவரோ-ஜெயஜெய
காவுலவுங்குழல்ரதிதேவி காவலனுயர்கதைபாட
பாவுலவுந்தமிழறிவோர்கள் பாதம்பணிந்தேனே-ஆ-ஆ
பூவுலவுந்திருவடியார்கள் பூசுரர்விண்ணவரிருடியர்கள்
மூவுலகும்புகழுஞ்செல்வ முன்னவனைத்துதியே-ஜெய-ஜெய-



விருத்தம்.

முன்னவன்பாதம்போற்றி முனைகிளிபரியாக்கொண்ட
அன்னவன்கதையைப்பாட வலைகடலுலகிற்கூடற்
றென்னவன்பெரிதிசைக்கும்பன் சிற்றடிவணங்கிக்காற்றோர்
மன்னவனாடகத்தின் மங்களம்வழுத்துவோமே.

மங்களம்.

தரு-இட--சௌராஷ்டகம்-திரிபுடைதாளம்.

பல்லவி

மங்களமே மங்களம்.ரதி
மன்மதநாடக வழுத்தியபேர்க்கெல்லாம்-மங்களமே

அநுபல்லவி.

சங்கீதச்சுதிதித் தாளமத்தளத்துடன்
இங்கிதபாடகர்க்கு மின்பமெனக்கேட்பவர்க்கு-மங்களமே

சரணங்கள்.

செல்வவிநாயகர்க்குந் தேவிவல்லபையாக்கும்
ல்விச்சபையார்க்குமுக் கண்ணனுக்கும்பார்வதிக்கும் - மங்களமே

செங்கமலக்கண்ணனுக்குந் திருவுக்குமன்மங்கைக்கு ம
யங்கயன்விதிக்குந்தென் பார்படங்கையருக்கும்-மங்களமே

செந்தமிழ்முனிக்கும்வள்ளி தெய்வானைநாதனுக்குந்
சந்தரமூர்த்திருமலை தாசனுக்குங்காசினிக்கும்-மங்களமே



கதையின்வரலாறு.

விருத்தம்.

பூவுலவுஞ்சந்திரனீராறுபானு
    பூசுரர்களிந்திரனிந்திராணிவேதன்
பாவுலவுநாமாதுபதினெண்சித்தர்
    பகர்முனிவோருருத்திரரோர்பத்துமொன்று
தேவுலவுசத்திசிவதிருவுமாலுந்
    திகழியக்ககின்னரர்கிம்புருடர்பொன்னி
ஞலவுறுதிக்கிறவன்கிளைஞர்சூழும்
    அறசபையில்தககன்வாயிடக்காய்த்தானே.

அகவல்.

சிவனுக்குப்பதிலொரு சிவனைமேவசெய்
பவனுமேயாவனைப் பகர்ந்துமேதக்கன்
அசனையிகழ்ந்து இளப்பமாயெண்ணி
வாசனைவேளவி வகுத்திடுமவேளை
பூசனைசெய்தே யுமைதனையழைக்கப்
பூசுரர்மாதர்கள் போயினரக்கணம்
பார்க்கவேபெண்ணிப் பானிடம்போயுமை
ஏர்க்கவேசொல்லி யீஸ்பரிகேழ்க்க
சிவனுருமப்போ சினமதுகொண்டு
தவனுரிபோவது சரியல்லவம்மை
இகழ்ந்ததோர்தக்க னிடமதிற்செல்ல
ஆகந்துணிகொள்வ தழகல்லவென்ன
அவ்வுரைகேட்டு அம்பிகைதானும்
கவ்வியசாந்தஞ்சொல நாரியையேகண்
போய்வாவவண்ட புரிதலிவ்வந்து

தாய்பாதம்போற்றத் தனையனைத்தழுவி
கூவிடாவணனைக் குமரியுமறிந்து
மேவிடத்தாதையன விந்தையையறிந்து
அத்தனையெண்ணிலா வசடுகள்சொல்ல
உத்தமிஉமையாள் யோகத்துலாவி
அடவுறச்செய்தே யம்பிகைமறைந்து
திடமலையரசன் சேயெனப்பிறந்தாள்
அவ்வணமீசன் யகத்தினிலறிந்து
செவ்விழிநெருப்பிற் செனித்தவீர
பத்திரனாகப் பதினெண்ணாயுதமுஞ்
சித்திரவுருவாய்ச் சிவனைவணங்க
அக்கணமீச னறைந்ததியாதெனில்
தக்கன்மீது சினமதுகொண்டு
கீழ்விழச்சென்னி கிரீடமுந் ள்ளி
வேழ்வியுமழித்து விரைவுடன்வருக
நித்தனுத்தாரநிறைவுடனருள
அத்திகளாயிரம் பூண்டதேரதனில்
சுத்தியேபூதத் தொகுதிகள்சூழ
அட்டகஜம்செவிக் கணிகுண்டலமாம்
எட்டுரகங்களு மிலங்கியபணியாய்ப்
பூண்டுதக்கன்மேற் போரதுவிளைக்க
ஆண்டிடுந்தேவர்க ளஷ்டவசுக்களும்
ஈதிறொருகோடி பலமுளருத்திரரும்
திதிகளும்வாரத் தேவர்களுடனே
மருத்துகளியக்கர் மாமுனிவோர்கள்
பருத்திடுந்தக்கன் படையுறவோர்களும்
இந்திரனயன்மால் இரவிபன்னிருவரும்
சந்திரன்முதலுள தளங்களுமடிய
திக்கிலாத்தக்கன் சிரமதுதுணிக்க
அக்கணமிந்திர னன்னியமாகி
கையில்வச்சிராயுதங் கதையும்போட்டு
மெய்யதுநடுங்கி விண்ணுலகொழிந்தான்
உதாசனனெழுநா வுடலறுபட்டான்
கதாயமனுயிர்விட்டுக் காசினிவிழுந்தான்
வாணியின்மூக்கை வாளினாலரிந்து
சேனுளதக்கன் தேவிகாதறுத்து

வருகையில்நிருதி வருணனும்வாயுவும்
இருநிதியாளனு மீசானியனும
அங்கங்கள்பதறி யாவையுமொடுங்கிச்
சங்கைகொண்டேங்கித் தன்றிக்கிற்சென்றனர்
அக்கணம்வீர னரனிடமுரைக்க
முக்கணனிறந்தவர் முளைத்திடச்செய்து
தக்கனுக்காட்டுத் தலைதனைக்கொடுத்தார்
பார்ப்பதியிமவான் பாலகியாக
சீருடன்ஜனித்து தேவியும்வளர்ந்தாள்
அம்மையைநாரத ரறிவிக்கவேண்டி
கொம்மையேசரிமவான் குடியினிற்சென்று
இமையவெற்பேரனு மின்பமாய்க்கேட்க
உமையவள்குறியினை யோதுவார்நாரதர்
நெற்றியிற்பாதி நெருப்பெனுமவிழியும
பற்றியகரத்திற் பலமுளசூலமும
மோர்தனமறையு மோர்கரதலையும்
நேர்படுபசுமைப் பாதிமெய்நிறமுந்
செஞ்சடைமுடியுந் திகழுவளிவிழினை
மஞ்சன்பருப்பதன் பனமுறவுறைத்து
பனிவரையீசன் பாகமேசேரத்
தனியுமையவனிவள் தானெனமொழிய
சயிலவன்மகிழ்வாய்ச் சங்கரனுடைய
செயல்பெறமகளைத் தியானஞ்செய்யென்றார்
இப்படியாக யிருக்கையிலிந்திரன்
முப்பத்துமுக்கோடி தேவர்கள்முனிவோர்
பிரமனைத்தேடிப் புறப்பட்டுவந்து
தருமமோசொல்லுந் தாருகாசூர
னடியிறுலெங்க ளவயவமெலிந்தோம்
மடியவேபோர்சொல் பகருவீரென்ன
அக்கணம்வேத னவர்களைப்பார்த்து
முக்கணனாலு முராகரியாலு
முன்னிடுமன்றிமற் றொருவராலில்லை
மன்னவனிமவான் மகள்தனையீசன்
கூடினற்குமார குருபானுதிப்பார்
வாடிடச்சூரனை வதைப்பவரவரே
ஆகையாலீச னம்மையைச்சேர
ஏகியேநீங்க ளெத்தனஞ்செய்வீர்

என்றுமேவேத னிந்திரர்க்குரைக்கச்
சென்றுமேயிவர்கள் திருச்சபைகூடி
யோசனைசெய்தே யும்பர்கள்மயங்க
வாசனைக்கிழவன் மாரனைநினைந்து
நாரதருரைப்பார் நவில்மகபதிமுன்
மாருதத்தேரோன் மதிக்குடைபிரியன்
வாரிதிமுரசன் மாதர்கள்படையோன்
சாரதிரினைத்த தலமதிற்செல்வோன்
மாரனுலாவு மகபதியென்று
விருடனாதர் விளம்பியபோது
அவ்வுரைகேட்டு ஆயிரங்கண்ணன்
செவ்வெணநினைந்து திறமுளதூதர்
யாரொன்றுவிளம்பி யவர்களையனுப்ப
சீருடன்மனோரஞ் சிதநகர்சென்று
மன்மதவேளை மகபதியழைத்தார்
தென்மந்தமாருதத் தேரினிலேறி
யின்றிடமகபதி யிடத்தினில்வந்து
நின்றிடமதனை நிலைபெறவாழ்த்தி
தோத்திரஞ்செய்து சுரர்களைக்காக்கவிம்
மாத்திரந்தயவு வைத்திடவேணும்
தெக்ஷணமூர்த்தந் சிவன்றவமழியென
வச்சிரபாணி வழுத்திடமதவேள்
ஆணெனும்பெண்ணெனு மலியெனுமில்லாத்
தாணுவைப்பாணந் தைக்குமோதேவே
என்கையிலாகா திந்திரகேளும்
மங்கையோர்பாகன் மழுக்கரந்தரித்தோன்
அக்கினிவிழியா னவரிடஞ்சென்றால்
விக்கினம்வரும்வரும் வீணல்லசொன்னேன்
என்றிடமதன னிந்திரனவனும்
குன்றெனவுபருரை கூறுவான்பாரில்
மானிடர்மிருகம் வாரியூர்வனவும்
யானைமுதலெறும்பு யாவையும்பெருக
உண்டுசெய்யுனது வல்லபமெளிதோ
ண்டகளுவில் மொழிதனைவைத்தான்
யுரந்தனிற்றிரு மங்கையைவைத்தான்
ாலன்சிரங் கங்கையைவைத்தான்
ய்தவல்லப மங்கசவேனே

பாருனுலாகும் பரமன்மேற்கணையைச்
சீறியேயெறிவாய் சித்தசவேளே
கூறினேன்றயவது கூர்ந்திடுமென்ன
அங்கசனக்கணை யன்புடன்சென்று
சங்கரலிங்கமேற் றன்கணைதொடுத்தான்
தொடுத்திடுங்கணையுந் தொழில்புரிகாமும்
கொடுத்திடும்பசுமைக் குணமுளவடிவுங்
உருவமுநீறா யொழிந்திடமதனன்
பருப்பதமகளும் பரமனுமாக
விடைதனிலேறி வெள்ளியங்கிரியில்
அடைவுடன்வருமு னயனரியமரர்
திருக்கலியாணத்திற் கெத்தனஞ்செய்தார்
மருப்பெனுங்கயிலையில் மாதுடனிருந்து
அங்கிலங்கியபணி யன்புடனணிந்து
மங்கிலியதாரண மணமதுமுடித்தார்
முடிந்தபின்கயிலையில் மூர்த்தியாரிருக்கப்
படிந்தவரவர்பதி பாங்குடன்சென்றார்
உருவிலியெரிந்தநீ றுற்றசங்கதியைப்
பருவமாம்ரதியாள் பாங்குடனறிந்து
அரியயனமர ரவர்சபைசென்று
பிரியனென்கணவன் பிழைத்திடும்வாறு
செய்யவேவேணும் தேவரீரென்ன
உய்யவேசிவன்பா லுரைத்தனர்விண்ணோர்
அவ்வுரைகேட்டு ஐமுகனாரும்
இவ்வுலகுருவிலி யெனப்பெயர்பெறவும்
இரதிமின்றனக்கு எழில்பெறுமுருவாய்ப்
புவித்தடமனிதர் பூவைமாதருக்கு
சபித்தனனீச னருபியாய்த்தானே
இவ்விதமாக யிரதியுமதனுங்
கவ்வியமின்படை காரிருட்கரியும்
வெண்மதிக்குடையு மீனகேதனமுந்
தண்மலர்ப்பாணந் தாழம்பூவாளும்
வசந்தமந்திரியு மாருதத்தேரு
மிசைந்தகோகில மெக்காளங்களும்
பேரிகைவாரிதி பெருகிடமதனன்
சிருடமனோஞ் சிதரசர்தன்னிற

பகமெனுங்கொலுமண் டபந்தனிலெயிலாய்
சுகாநியுடனே தோய்ந்திருந்தனனே



## நூல்.

### விநாயகர்வருகிற சந்தவிருத்தம்.

இத்திசையோர்களு மெத்திசையோர்களுமிடர்விடவேபுகழ்
க்ஷத்திரியோர்கள்விசித்ரநியூகிகள்தனிமுதலெனமொழியப்
பத்திகொள்விரதர்கள்சுத்தியுமிடவலபாரிசமேவருகச்
சத்திகொள்செல்வச்சித்திவிநாயகர்சபைதனில்வந்தாரே.

### விநாயகர்வருகிற-தரு-இ-ம்-சாவேரி-ஆதிதாளம்,

பல்லவி.

செல்வவிநாயகர்வந்தார்-தேவாதிதேவ
செல்வவிநாயகர்வந்தார்

அநுபல்லவி.

செல்வவிநாயகர்வந்தார் கல்வித்தமிழ்ச்சபையில்
சித்திரவாகுவின் மத்தியிலேறிவி
சித்திரதத்திமி ததிங்கணத்தோமென(செல்வ)

சரணங்கள்.

நல்லவேதியர் போற்றவே-நான்மறைகளோதி
நறுமலர்மாரி தூற்றவே
சல்லாபமாகிய வல்லபையுடன்கூடிச்
சத்திவயிற்றி லுதித்திடுபுத்திரர்
தத்திமிதகதிமி ததிங்கணத்தோமென(செல்வ)
மறவர்குலங்கொண் டாடவே-விருபாட்சி
வாழுமறையோர் பாடவே
துறவோர்பணிந்துவாழ்த்த அறமால்போலேதழைக்கச்
சுத்திமிகுத்திடு மத்தளமொத்தொடு
வத்தைதழைத்திட ததிங்கணத்தோமென(செல்வ)

### குருக்கள்வருகிற விருத்தம்.

சந்தனப்பூசிக்கீறித் தலையினிற்புஷ்பஞ்சூடி
தெந்தனவார்த்தைபேசித் தீபமுமணியுமேந்தி

பந்தனதூபம்வீசும் பரிமளத்துடனேகூடி
விந்தையதாகப்போற்றி வேதியரிதோவந்தாரே.

குருக்கள்வருகிற-தரு

இ-ம்-புன்னாகவராளி-திரிபுடைதாளம்.

பல்லவி.

குருக்கள்வந்தாரே-கணபதி-குருக்கள்வந்தாரே.

அநுபல்லவி.

மருக்குலாவிய கொன்றையுந்தும்பையும்
மடலிளந்தென்னங் குடலையுங்கொண்டு (குருக்)

சரணங்கள்.

மார்பிற்பூணூ லழகும்-அட்சதைபொட்டு
வைத்தநுத லழகும்
கார்மின் குடுமிகளும்-மந்திரவிபூதி
கட்டிட்டதிட்டங்களும்
கூர்வேதசாஸ்திரங் கூறிமந்திரஞ்சொல்லிப்
பாரிற்செல்வக்கண பதியைப்பூசைசெய்ய (குருக்கள்)



குருக்கள் விநாயகரைப் பூசைசெய்யும்

விருத்தம்.

ஓங்கணபதியேபோற்றி உயர்கயமுகனேபோற்றி
வாங்குவங்குசனேபோற்றி வல்லமைநாதாபோற்றி
தாங்குமூஷிகனேபோற்றி சண்முகன்றுணைவாபோற்றி
தீங்கிலாவுமையாள்பெற்ற செல்வனேபோற்றிபோற்றி

குருக்கள்சொல்-தரு-இ-ம்-சுருட்டி-அடதாளம்.

பல்லவி.

மூஷிகவாகன கஜமுகனே-கருணாபயங்கர
மோதக்கசதுர்வேத பாதகனே

அநுபல்லவி.

கோசிகமுனிபூசித்தசிவ கோலமிகும்வடிவேலர்சகோதர
முளைப்ப்ன பூக கணனே ஓற்றைக்
கொம்பனேநின்பதம் நம்பினேன்சம்பிரமாய் (மூஷி)

சரணங்கள்.

மேருவொருகை வேடதாகவும்-மருப்பொடித்து
விதித்தெழுத்தாணி கூரதாகவும்
பாருளோர்க்குமதி கூருண்டாகப்
பந்தமகாபார தத்தையெழுதிய
பச்சையாமறு கிச்சைகொண்டுதன்
உச்சிமீதிற் புனையும்விச்சித்திர (மூஷி)

சுந்தரிமீனாட்சி பாலகா-சித்திவிநாயகா
தொந்திவயிற்றைங்கர லோலகா
சந்திரசேகர நீலகண்ட
சங்கார்திருப் புதல்வனேதிவ்விய
சங்காரவணி வொங்காரரும்ப
தடவிகடதட வெனாரஞ்சித்திடும் (மூஷி)

செந்தமிழ்த்திரு மலைக்கவிராஜன்-அரவிந்தச்சேவடி
சென்னிமேல்வைத்துப் பூசிககுந்தாசன்
விந்தையாகச் துதிசெயவாகு
வினிலுலாவிய தனிமுதலெனும்
வித்தகா மது மஸ்த்தகா சத்தி
விளங்கும்வல்லபை சித்திவிநாயகா (மூஷி)



பரமசிவம்வருகிற-விருத்தம்.

பவநாசமிடுநாதன்பல்லுயிர்க்கெலாநிறைந்தபரமநாதன்
தவநாதர்பணிநாதன் சாரங்கமாமுனிக்குச்சகாயநாதன்
இவநாதமுதல்நாதன் இகபரசாதனைத்துக்கிசைந்தநாதன் [தான்
துவநாதனயனரிமால்காணுநாதன் துவிதமற்றபரம்பிரம சொரூபன்

பரமசிவம்வருகிறதரு-இ-ம்-கந்தார்த்தம்.

சிவமெனநவிலுஞ் சிவனடியார்கள்
பவமறுத்தாண்ட பனிமதிச்சடிலன்
நவகயிலாச நற்பதிவிட்டுச்
சிவனுரிமைய மலைச்சாரியில்
தெக்ஷணமூர்த்தத் தியானஞ்செய்யவேவந்தாரே
தவநாதனனமோன சங்காரன்பதிலுண்டார்க்குத்
தக்கனிடஞ்சென்றதேவ ருக்கசுரர்படைமிகுக்க (சிவனு)

உமையாள்பிரிந்தை பெண்ணி-போசனையண்ணி
யுலகிருளாகவே நண்ணி
சுமையானபெருந்துல சூரிவ்வுலகெல்லாம்
இமைப்போதளித்தோமென் றிருகையங்குலியொட்டி (சிவனு)
தேவர்கள்கேசவன் விடுத்த-சேதிக்கடுக்க
ஜீவஜெந்துயாவும் படைத்த-பிரமன்கொடுத்த
ஸ்திரமொழிப்படி நடத்த
மூவுலகின்பங்கதிக்க மோகமதனையதிக்க
தேவிசிவன்விதிக்கத் திகழ்சண்முகனுதிக்க (சிவனு)

கட்டியக்காரன்வருகிற-விருத்தம்.

ஈசன்றன்றிக்கோரெண்ணி விணைக்கமாங்கணைக்கிலூற்ற
வாசவனமறவிராட்டில் வல்லசுரரைஜயிக்கக்
கேசவன்வேதன்பாலிற் கேட்கச்சூரர்களுக்காக
வாசவன்வாசற்கட்டியக் காரனும்வருகின்றானே.

தரு-இ-ம்-சங்கராபரணம்-அடதாளம்.

பல்லவி.

கட்டியக்காரன்வந்தானே- காவலனுக்குந்தேவேந்திரன்வாசல்
கட்டியக்காரன்வந்தானே.

அநுபல்லவி.

மட்டில்லாதமகபதி வல்லமைகளெல்லாஞ்சொல்லி
திட்டமுடன்தேவர் சபையைக்கூட்ட
தித்திமிதிமிசெந்தரி ததிங்கணத்தோமென (கட்டி)

சரணங்கள்.

தங்கக்கிண்கிணி கலகலென்னத்
தலைதனிற்பாகையுங் கலிக்கியென்ன
செங்கையில்விருது சங்கீதந்துன்னச்
சித்திரத்தினைப் பணிகள்மின்ன
அங்கிஜார்விஸ் திரமென்ன
அழகியநடனச் சங்கீதஞ்சொன்ன
சிங்காரமுமிங்கித மங்களமாகத்
தித்திமிதிமிசெந்தரி ததிங்கணத்தோமென (கட்டிய)

கட்டியக்காரன்-வசனம்.

அகோ ராஜாதிராஜ ராஜபரமேஸ்பர ராஜகெம்பீர ராஜமார்த்தாண்ட ராஜகுவத்தண்ட ராஜகோலாகல ராஜலீலாதர ராஜவசீகர ராஜபூஜித தெய்வலோகமாகிய அமராபதிபட்டணத்தையாளுஞ் செங்கோலதிபதி தேவேந்திரமகாராஜன் கொலுவுக்குவருகிறார் பராகு ளச்சரிக்கை.

இந்திரன்வருகிற-விருத்தம்.

நிரம்பியதேவர்சத்த ரிஷிகளும்யாழ்வல்லோரும்
பரம்பியவுடுக்குவீணை பண்ணதவர்கண் முன்னேநிம்
ஆரம்பைமேனகைதிலோர்த்தமையூர்வசியிந்திராணி
வரம்பிலர்சூழதேவமகராஜன்முன்வந்தானே.

தரு-இ-ம-உசேனி-ஆதிதாளம்.

பல்லவி.

தேவேந்திரராஜன்வந்தான்-தேவர்கள்சூழ
தேவேந்திரராஜன்வந்தான்.

அநுபல்லவி.

ஆவல்சேரம ராமதிதன்னில்
அங்கமிகுஞ்செங் கோல்கையிலேந்தி
ஏவல்களாயிரந் தேவர்கள்செய்ய
இந்திராணியுடன்கூடித் தந்திராணிசொல்லியே
தாமதாமதகஜெம்ஜெணு தகதநிங்கணத்தோமென. (தேவேந்)

சரணங்கள்.

பஞ்சகன்னிய ரட-நாட்டியத்துடன்
பவனிவெள்ளானை தேட
அஞ்சுதருவுங் கூடசத்தரிஷிகள்
அமரர்பூமாலை சூட

தஞ்சமேசொல்லி வருணன்துயர்படச்
சாமரைதெய்வ கன்னியர்சாமபோடச்
செஞ்சிலைசிரகறி வச்சிராயுதத்தோடு
திக்கினிலகீழ்த்திசை தேவனென்னவே (தேவே)

இந்திரன்-வசனம்.

அகோவாரும்பிள்ளாய் கட்டியக்காரா நமது கொலுவில் நடிக்கும் நாட்டியப்பெண்களை அதிசீக்கிரத்தில் அழைத்துவாருமகட்டியக்காரா.

கட்டியக்காரன்-வசனம்.

அப்படியே அழைத்துவருகிறேன் சுவாமி.

நாட்டியப்பெண்கள்வருகிற-விருத்தம.

தம்புருமத்தளந்தித்தி தந்திநயவீணையுடன்முளந்தட்ட
அம்புருவநயனமுகநவரசத்தையாவருக்குமழகாய்க்காட்டச்
சம்பிரமத்துடனேதான்தேவர்சபைமத்தியிலேலதத்தோமென்று
உம்பருலகதரம்பையூர்வசியுங்கொலுவின்முன்வந்துற்றனரே.

தரு-இ-ம்-சௌராஷ்டகம்-திரிபுடைதாளம்.

பல்லவி.

ஓயிலொடுமேயவுமே யம்பிகுரம்பை-யூர்வசியுமவந்தார்

அநுபல்லவி.

கயல்விழிமயல்தரக் கம்பகாடன்முனஞ்
செயல்பெறுமேமேனி திமிதிந்தோமெனை (ஓயி)

சரணங்கள்.

அயல்பெறுவரத்தியக் கித்திமித்தோமெனை
அழகியநேத்திரம் சபைபார்த்திட
இயல்பெறுகந்தர மீட்டிடவட்டமி
யிருகரம்பரவுக யிச்சபைமெச்சிட
குயில்மயிலொலிபஞ் சமசுரமேவிடத்
கூறியதத்திமி ததிங்கணத்தோமெனை(ஓயிலொ)

இந்திரன்சொல்-வசனம்.

அசேர்வாரும் பிள்ளாய் கட்டியக்காரா நம்முடைய சபைக்கு வந்த ரம்பை மேனகை திலோர்த்தமை ஊர்வசி என்னப்பட்ட நாட்டியப்பெண்களை விசித்திரமாக நாட்டியஞ்செய்யச் சொல்லும் பிள்ளாய் கட்டியக்காரா.

கட்டியக்காரன்-வசனம்.

அப்படியே மகாபாக்கியமையா சுவாமி.

நாட்டியப்பெண்கள்-நடித்தல்.

தரு-இ-ம-சங்கராபரணம்-ஆதிதாளம்,

பல்லவி.

சாமிமையல்-பெருகுதே-சகியேஞன்காமி
சாமிமையல்பெருகுதே

அநுபல்லவி,

பூமிபுகழுந்திவ்யப் புரந்தரனுரந்தர (சாமி)

கூடியேயுறவாடி கொஞ்சிவிளையாடி
தேடியேமலர்சூடி சிற்றின்பங்களாடி
பாடிமதன்கலையின் படிதொழில்செய்யவுமே (சாமி)

வேறு.தரு-பல்லவி.

விரகலாகிரிகொண்டே ஹெருமுத்தத்தருவாய்-தே
வேந்திரமகாராஜேந்திரனே

அநுபல்லவி,

இரவும்பகலுமுன்னை நினைந்துநினைந்து
இச்சைகொளமத வேள்சரந்தைத்து (விரகலா)

சரணங்கள்.

கூடியெனையணைந்து கொஞ்சிமனமகிழ்ந்து
வேடிக்கையாய்வினை யாடவுன்மீதில் (விரகலா)

இந்திரன்சொல்-வசனம.

அகோவாரும்பிள்ளாய் கட்டியக்காரா இந்தபெண்கள் நாட்டியஞ் செய்ததைப்பார்த்து சந்தோஷ மடைந்தேன் அவர்களுக்கு வேண்டியவெகுமதி கொடுத்தனுப்பும் பிள்ளாய் கட்டியக்காரா.

கட்டியககாரன்-வசனம்.

அப்படியே கொடுத்தனுப்புகிறேன் சுவாமி.

மகாவிஷ்ணுவருகிற.தரு.

இ-ம்-காந்தாரத்தம.

வெகுதவமகவான் விண்ணவர்ககாக
மிகுமிகுசூரரை வெல்லவும்வேண்டித்
தகுமதியுரைகள் சாற்றுதற்கென்று
ரகுநந்தர் வைகுந்தர்
வந்தார்லட்சுமிசமேதர்-ரகுநந்தர்
வநதார்லட்சுமிசமேதர்

சுககந்தசுவாமியால் சூரர்குலமழிய
நகுகந்தர்ப்பனுல்தெக்ஷ ணுமுகூர்த்தமொழிய (ரகுநந்)

உம்பர்கள்கூடிக் கொண்ட-உயர்ந்த
யோசனைப்படியேகை கூட
வெம்பியேசூரர்கள் வாட-கந்தனுதித்து
வெற்றிவேற்கோதையினுற் சாட
நம்பியதேவர்கள் காடுஞ்செழித்துவாழ
இங்கிதமாகவே யெல்லோருமடிதாழ (ரகுநந்)

பொது-விருத்தம்.

இந்திரன்விண்ணோர்யாரு மிலக்குமிநாதனை
நந்தனைத்தேடியோடி நாசமாயசுரர்செய்யும்
நிந்தனையதனையிப்போ நெடியவாகேளாயென்று
வந்தனைசெய்தேதேவர் வணங்கியேயிறைஞ்சினரே.

இதுவுமது.

இப்படியிந்திரனுரு மிசைகொள்பொன்னுலகிலுள்ள
முப்பத்துமுக்கோடிதேவர் முனிவருமிதையகொந்து

சரணங்கள்.

சென்றகாலங்களுமத்தியி லின்றகாலங்களுமுன்பின்
செல்லுங்காலங்களுங்கண்டு சொல்லும்வல்லபங்களும்
மன்றல்முனையும்பாசனைடத்தரு மாங்களுமருள்வாங்களு
மெல்லுரகங்களைவெல்லுந்திறமு மலைகளுமலைநிலைகளும்
என்றுமழியாப்பேர்களுடலை யிக்குமதியுமாக்கும்விதியும்
ஒன்றப்பிடித்திதவருய்யு முபாயமெனிவாயமுந்துசொல்வி
விதரணமாகப்

பொதுவிருத்தம்.

காருகாருானுடனேமயூரன் மன்னடியாளுடல்வாடித்
தயங்கியேங்கித்
தேருக்கும்படைகுதிரை தெறித்துநின்றதேவரெல்லாஞ்
சிந்தித்தெண்ணிப்
பாருகாவைகுந்தநந்தன்பானுறாயமற்சத்திபப்புவிப்
பதியோர்தாமம்
போருகானிடஞ்சென்று புகலுவார்குறியிசை
புகலுவாமே.

தேவர்கள்சொல்-திபதை.

இ-ம-காம்போதி-சாப்பு-தாளம்.

கண்ணிகள்.

சூரிமிசையால்சொக்தோம் வேதனே-அதைத்
துலைக்குமுபாயஞ்சொல்வீர் வேதனே
பாரிற்சுரர்கமுலன்டு வேதனே-தயவு
பண்ணவெண்ணுவீர்சதுர் வேதனே
வேறொருதிக்குமில்லை வேதனே-எங்கும்
வேண்டிச்சலித்துவந்தோம் வேதனே
கூறுவீர்தேறுதலை வேதனே-உன்மை
கொடுக்கக்கைகூப்பினோம் வேதனே

விருத்தம்.

வேதனிடந்திற்சென்று விகடமாயசுரர்செயயும்
வாதனைகளைவிளம்ப மலரயன்கேட்டமாத்திரம
காதனரிமவான்பெற்ற காரிகைச்சேர்வாராகில்
தாதவிழ்கடப்பமாலைச் சண்முகருதிப்பாரன்றே.

இதுவுமது.

உதித்தசுரரைவதைத்து உலகெலாஞ்சுகத்தில்வாழப்
பதிப்பவராவரேயலலாற் பார்தனிலொருவருண்டோ

கதித்தெழுமிமவான்பெற்ற கன்னியையீசன்சேர
மதில்தகதிடும்படியதாக வகையதுதேடுவீரே.

பிரமன்சொல்-இறைதை-இ-ம்-காம்போதி-ஆதிதாளம்.

கண்ணிகள்.

வரைப்பெண்ணைச்சிவன்சேரும்
வகைதேடுமகபதி தேவர்களே-அசுரர்
வம்சத்துக்கோர்மறலி
மதிக்குநெஜண்டாயுதன் தேவர்களே
உதித்திடுவோர்வின்
னுலகுக்குப்பயமில்லை தேவர்களே-நான்
உற்றதுசொன்னேன்
உளவதறிந்திடுங் தேவர்களே
வீரர்க்குவீரன்
விதிக்குமெட்டாதவன் தேவர்களே
சாகத்திலுதித்துச்செவ்
வேளெனும்பெயர்கொள்வோன் தேவர்களே
மூவர்க்குமுதற்குரு
மூர்த்தியாகியகந்தன் தேவர்களே-யானை
முகவனுக்கிளையவன்
குகனெனும்பெயர்கொள்வோன்தேவர்களே
சூரர்குலமெல்லாந்
துணிக்குமயூரன்காண் தேவர்களே-நீங்கள்
சுகமாகவாழ்காற்
காலம்வந்துற்றது தேவர்களே

விருத்தம்.

தேவர்கள்பிரமதேவன் செப்பியவார்த்தைகேட்டு
யாவருமவருக்கயிந்திரன் யானைமேற்சாரியாகப்
பூவையர்நடனஞ்செய்யப் புனிதன்விண்ணுலகுக்கேகி
ஆவலாய்ச்சபைகள்கூடி யலங்காரலோசித்தாரே.

இந்திரன்சொல்-விருத்தம்.

முப்பத்துமுக்கொடிதேவர் முனிவர்கள்ரிஷிகள்மாரே
செப்புவேனென்றுகேளீர் திகழ்மலர்வாசவேதன்
ஒப்புறவாகச்சொன்ன உபாயத்தைசெய்யவல்லோர்
இப்பொழுதெவராலுமெழுந்துநின்றேகுவீரே.

வசனம்.

ஆகோகேளுங்கள் முப்பத்துமுக்கோடிதேவர்களே இப்போது

பிரமதேவர்சொல்லியபடி சிவன் உமையவளைச் சேரும்படியான தந்திரம் யாதாவதிருந்தால் சொல்லுங்கள்பார்ப்போம்தேவர்களே.

தேவர்கள்சொல்-வசனம்.

அப்படியே நாங்களனைவரும் ஆலோசித்துச் சொல்லுகிறோம் தேவேந்திர மகாராஜனே.

பொதுவிருத்தம்.

திரிலோகஞ்சஞ்சரிக்குஞ் சமர்த்தைநாட்டித்
தேவகாந்தாரியெனும்ராகங்கூட்டி
மரியாதையுளமுனிவர் மீதிற்பூட்டி
மலர்க்கணையைத்தொடுக்குமதன்மேலேபோட்டி
பரியாசவார்த்தைகள்போற்கோள்கள்மூட்டிப்
பகருசுதிலயக்கியானவீணை மீட்டி
அரிராஜதேவர்சபைநோக்கிப்பேட்டி
யாகநாரதமுனிவரங்குற்றுரே.

நாரதர்வருகிற-தரு

இ-ம்-தோடி-அட தாளசாப்பு.

பல்லவி.

நாரதமுனிவந்தாரே-இந்திர
ராஜனிடம்வீணையோசையுடன்நல்ல (நாரத)

அநுபல்லவி.

மாருதத்தேரேறியாதி மாரனைச்சிவனிடத்தனுப்பி
வைப்பதாய்மன தொப்பியேவயி
றுப்பியேகோள் செப்பத்துணிந்து (நாரத)

சரணங்கள்.

திரிலோகமுஞ் சஞ்சரித்து-ஞாபகம்வைத்துத்
தேவரகசியங்களை ஆவலுடனேவினவி
பரியாசம்போலே விரிந்துதேவர்க்கிடுக்கம்
பண்ணுமசுரர்குலத்தை மண்ணெனச்செய்தேவிடவும்
பரிபூரணமுனிவர் கதிபெறவேண்டி
வித்யாளர்பார்க்கவும்-மத
னேர்க்கவுந்துயர் தீர்க்கவும்வின் கார்க்கவுமெண்ணி. (நாரத)

நாரதர்சொல்-விருத்தம்.

நாரதமுனிநாதன்று னல்லும்பர்சபையில்வந்து
காரணமாகநீங்கள் கருத்திலோசிப்பதேது
பூரணமாகநம்மால் புரிந்திடுமுபாயமுண்டு
மாரனைக்குறித்துஇந்திர மகபதிக்குரைசெய்வீரே.

(வ-ம்) அகோவாரும் தேவர்களே இப்போது தாருகாசூரன் முதலாகிய சூரர்கள்செய்யும் பொல்லாங்கு நீங்கும்படியான ஒருபாயஞ் சொலலுகிறேன் அதைஆலோசிப்பீர்களாகில் சுகமாக யனுபவிப்பீர்கள் தேவர்களே.

வெண்பா,

பூங்கணைபாலீசனார்புத்திபேதித்திடுவோன்
ஆங்கவனைபல்லாம லாருமில்லை-யீயாக்கும்
ஆதிமதனேனை யரசனேநீயுமிப்போ
தூதனுப்பியேயழைக்கச்சொல்.

வசனம்.

அகோவாரும்தேவேந்திரர்முதலாகிய தேவர்களேநாம்ஆலோசித்ததில் நமக்கொன்றுதோற்றுது அதெனனெனில் மனோரஞ்சித நகரத்தையாளப்பட்ட மன்மதனைத் தூதர்களையனுப்பி வரவழைத்து சிவன் தபத்தை யழிக்கச்சொல்வீர்களாகில் க்ஷணநேரத்தில் நிறைவேற்றுவான் அப்போது நீங்கள் இமிசைநீங்கிசுகப்படுவீர்கள் ஆகையால் தூதர்களை யனுப்பி சீக்கிரத்தில் மன்மதனை யழைப்பியுங்கள் தேவர்களே.

தேவேந்திரன்சொல்-விருத்தம்.

விந்தையாயெனதுவாசல் மேவுகட்டியனேகேளாய்
எந்தனுத்தாரங்கொண்டு ஏகிடுந்தூதர்தம்மை
முந்திநாமழைத்தோமென்று மொழியதுபிசகிடாமல்
சிந்தையில்நினைக்குமுன்னே சீக்கிரமழைத்துவாடா.

வசனம்-

அகோவாரும்பிள்ளாய் கட்டியக்காரா நம்முடைய ஆசாரவாசல் தூதர்களை அதிசீக்கிரத்தில் அழைப்பியும்பிள்ளாய் கட்டியக்காரா.

கட்டியக்காரன்-வசனம்

அப்படியே மகாபாக்கியம் சுவாமி,

கட்டியக்காரன்-விருத்தம்

அந்தார்புகழும்வீரத் தாரபாரங்கள்கொண்டு
கந்தரத்தொலிபாராட்டிக் கற்பகநாடன்கீர்த்தி
சுந்தரத்துடனேகூறித் தோர்விளக்கெதைவரேந்தி
இந்திரன்வாசல்தூத ரோகவந்திங்குற்றரோ.

தூதர்வருகிற-தரு.

இ-ம்-புன்னாத்வராளி-அடதாளம்.

பல்லவி.

தூதர்கள்நாங்களே-சேதிசொல்லுந்-தூதர்கள்நாங்களே.

அநுபல்லவி.

தூதர்கள்நாயகனே சொற்கொண்டுரைத்திடும்
மாதவதேவேந்திரன் வாசலுக்கேகுற்றிடும் (தூதர்கள்)

சரணங்கள்.

கூப்பிடுமுன்வந்த பேர்க்குபசாரஞ்
கூடாதென்றபேர்மேற் சொல்லுவோநேரம்
சாப்பிட்டுங்கைக்கூலி வாங்கியும்வீரந்
தாக்கியமூக்கின்மேற் கோபமகோரம்
மாப்பிட்டியென்கை முட்டியால்தட்டி
மடியைப்பிடித்தனை நொடியிலிழுத்துவருவோம் (தூதர்கள்)

தூதர்கள்வரால்-விருத்தம்.

உம்பர்மாதவத்தோர்க்கெல்லாமோங்கிடுஞ்செங்கோல்தன்னைச்
சம்பிரமாய்ச்செலுத்துந் தயாபரப்பொருளேபோற்றி
நம்பியவடியார்தன்னை நலமுடனழைத்தசேதி
யெம்பெருமானேயிப்போதியம்பிடீர்சரணம்போற்றி.

வசனம்.

அகோ வாருமையாசுவாமி தேவரீர் அடியேங்களை யழைப்பித்த காரியந்திருவுளம்பற்றியருள வேணுமையா சுவாமி.

இந்திரன்சொல-விருத்தம்.

சொன்னசொல்தவறிடாத தூதரேசொல்லக்கேளீர்
கனையத்துடனாரோக்கிய நகர்தனிற்சென்றுநீங்கள்
மன்னவன்மாரன்தன்னை மந்த்ராலோசனைக்குநாமும்
இந்நகர்வாசசொன்னோமென் றியம்பிநீரழைத்துவாரீர்.

வசனம்.

அகோவாரும் தூதர்களே அந்தமகாவிஷ்ணு புத்திரனாகிய மன்மத ராஜனை அதிசீக்கிரமா யழைத்துக்கொண்டுவாருங்கள் தூதர்களே.

தூதர்வசனம்.

அப்படியேயழைத்துவருகிறோம் மகாராஜனே.

கட்டியப்பெண்வருகிற-விருத்தம்.

வரம்பின்மனைநில்லாத காமியெனவேயுலகில்லவைசகள்கூறச்
சிரம்பெறுத்தயானைமுக லெறும்புகடைசீவனுக்குஞ்சிந்தைநோவ
உரம்பதியும்வனசமல ரொதிவாளிச்சித்தசனேயுற்றவாசல்
அரம்பையர்போல்நடனமிடுமாஸ்தானக்கட்டியப்பெண்ணாள்வந்தாளே

தரு-இ-மங்களகௌசிகை-ஆதிதாளம்,

பல்லவி.

ஆஸ்தானக்கட்டியப்பெண்வந்தாள்-அதிவொயிலாய்
ஆஸ்தானக்கட்டியப்பெண்வந்தாள்.

அநுபல்லவி.

மாஸ்தானமனோரஞ்சித மானசர்வாசல்
மன்மதசாஸ்திரியா ரிங்கிதங்கள்சொல்லித்
தரிகிடதரிகிட ததிங்கணத்தோமென. (ஆஸ்)

சரணங்கள்.

குளிர்தென்றற்றேர் மதன்மேல்மோடி
கொக்கோகம்பாடி
ஒளிர்வதனைங் கன்னங்கன்னோடி
ஒயிலுடனோடித்
துளிரிருகரவபி நயமதுதேடி
சுத்திலயத்தாள மத்தளமுங்கூடி
தெளிவுளகீதசங் கீதங்கள்பாடி
திரிகிடதிரிகிட ததிங்கணத்தோமென. (ஆஸ்)

விருத்தம்.

உலகினில்வாழ்வுகொண்டோ றுதித்திடுமுயிர்கட்கெல்லா
மிலகுசீர்சுகத்தைநல்கு மிரதிராஜேந்திரமாரன்
கலகவேளிதையவாசன் காமதோர்த்தண்டனின்று
கொலுமிகுமல்குற்சிம்மா சனக்கொலுவருகின்றானே.

இதுவுமது.

சுகராஜன்வைகுந்தம் றதிக்குநாதன்
சுபுத்திரனெனுமநீலமொம்துளங்குங்கோக
நாராஜனுருவில்செங்கோல்நடத்தும்ராஜன்
காருமிந்திராணிபங்கில்நயந்தேவாழ்தம்
பகாவஜனொடுமுனியைப்பழிக்கும்ராஜன்
பல்லுயிர்க்குமைங்கணையைப்பகரும்ராஜன்
மகாராஜனிரதிமணவாளராஜன்
மதனதுரந்தரராஜன்வருகின்றானே.

மன்மதன்வருகிற-தரு,

இ-ம-கல்யாணி-ஆதிதாளம்.

பல்லவி.

தாம்தாம்தக ஜேம்தரிகிடதக ஜேம்ஜேம் ஜெகநாதரி
திந்தரிதில்லான தில்லானதிந்தரி
திகதரிகிடதக ததிங்கணத்தோமென
மதனதுரந்தரன்வந்தான்-மையல்விளைக்கும்
மதனதுரந்தரன்வந்தான்.

அநுபல்லவி.

அதனமோகரதிப்பெண் ணுடன்கூடிநல்ல
கதியைப்பார்த்திந்திரன் தோன்றுஞ்சபையையாடி. (மதன)

சரணங்கள்.

உலகெலாங்காமபாணம் விடவேதிரக்குத்தாரம்
இலகவேதநதுவைத் திந்திரன்சபையைநோக்கிப்
பலகலைகள்கொக்கோகம் பாடிவிரகமீறி
உலவியதென்றற்றே ரேறியுல்லாசமாக
நிலவெனுங்கவிகைக்குள் நிலையாகவேதுலங்கித்
தலமானமனோரஞ்சிதப் பட்டணத்தைவிட்டு-நாம் (மதன)



மன்மதன்-சொல்-விருத்தம்.

அசைந்திடாதெனதுவாச லழகுகட்டியப்பெண்கேளாய்
உசந்திடுமெனதுசெங்கோ லோங்கிடுமபடிக்குநீதி
இசைந்திடவெனதுபக்க லிருந்துகார்யார்கள்செய்யும்
வசந்தமந்திரியைப்பிப்போ வாகுடனழைத்துவாராய்.

வசனம்.

அகோவாரும் கட்டியப்பெண்ணே நம்முடையமந்திரியாகியவசந்தனை அதிசீக்கிரமாக அழைத்துவாரும் கட்டிப்பெண்ணே.

கட்டியப்பெண்சொல்-வசனம்.

அப்படியே யழைத்துவருகிறேன் சுவாமி.

விருத்தம்.

கச்சிதமிகுந்ததய்ய காந்திகள்பளபளென்று
உச்சிதமானவாடை யுயர்மணிப்பதக்கமின்ன
அச்சுதனீன்றெடுத்த அனங்கராஜேந்திரன்பக்கம்
வச்சிரவாளுமேந்தி வசந்தமந்திரிவந்தானே.

வசந்தன்வருகிற-தரு.

இ-ம்-சங்கராபரணம்-ஆதிதாளம்.

பல்லவி.

மந்திரிவந்தானே-வசந்தமந்திரிவந்தானே

அநுபல்லவி.

மந்திரிவந்தானே யிந்தவுலகத்தில்
வந்தமதராஜன் சுந்தரப்பதம்நாடி

சரணங்கள்.

மண்டலமூன்றிலுஞ் சென்றுபவனிவரு
மன்மதராஜேந்திரன் வாசற்பிரதானி

நன்றாகஆரோக்கிய நகரிங்கார்பார்செய்ய
நல்லவிச்சித்திர நாகரீகத்துடன். (மந்திரி)

கன்னியர்படையெல்லா முன்னிதமாய்ச்சேர்த்து
காதல்கொண்டிடப்பெண்கள் மாதர்கள்மீதினில்
சின்னமலர்தொடுக்க முன்னோரதம்கடத்திச்
செகதலங்கொண்டாட சிங்காரமாகிய. (மந்திரி)

மாருதத்தேரிலிற் சாரதியாயிருந்து
மண்டலமன்னனைக் கண்டனோசெய்திடும்
தீரன்மன்மதராஜன் வீரன்சமுகந்தன்னில
திருமேயாழிதவரும லருகினில்வாழ்ந்திடும். (மந்திரி)

வசந்தன்-மன்மதனுக்குச்சொல்-விருத்தம்.

கரும்பெனுஞ்சிலைவளைத்துக் காமினியார்தம்மை
அரும்பெனும்பாணத்தாலே யடக்கிடுமரசேபோற்றி
விரும்பியவடியேன்றன்னை விளைவுடனழைத்தசேதி
தெரிந்திடக்கிருபைசெய்து செப்புவீரசெப்புவீரே.

வசனம்.

அகோ சரணஞ்சரணமையா சுவாமி தேவரீர் அடியேனையழைப்பித்தகாரிய மின்னதென்று அருளிச்செய்யவேண்டுமையா சுவாமி.

மன்மதன்விருத்தம்.

ஈன்னதுமொழிசப்பாம விருக்குமந்திரியேகேளாய்
மன்னவர்மறையோர்வைசியர் மற்றுஞ்சூத்திரரிங்கால்வர்
தன்னைகரின்மேலேயொன்றுந் தவறுமாயிருப்பதுண்டோ
இன்னவர்கள்வாராவண்ணஞ் சீக்கிரமுமாசெய்வாயே.

வசனம்.

அகோவாரும்பிள்ளாய் மந்திரி நம்முடையதேசத்தில் வாசஞ்செய்யும் பிராமண க்ஷத்திரிய வைசிய சூத்திரர்முதலிய யாவரும் குறைவில்லாம லிருக்கிறார்களா மந்திரி.

வசந்தன்சொல்-விருத்தம்.

உங்கள்தங்கீர்த்தியாலு முயர்ந்தசத்தியத்தாலுந்தான்
செங்கோலின்முறைமையாலுந் தேசத்திலமநுக்களெல்லாம்
மங்கலமாகத்தானேவாழ்ந்தவ ரிருக்கின்றார்கள்
துங்கமாகங்கீர்த்திபெற்ற துய்யனேசரணமையா.

(வ-ம்) அகோ சரணஞ்சரணமையர் சுவாமிதேவரீருடைய கீர்த்தியினலும் செங்கோல் முறைமையினலும் சத்தியத்தினலும் நமத்தேசத்திலுள்ள நான்குவருணத்தாரும் யாதொரு குறைவுமில்லாமல் செழித்துவருகிறார்களையா சுவாமி.

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

(மன்மதன்-வினு) நம்முடையதேசத்தில் தேவாலயம்பூசை
நழுவாமல்நடந்துவருதா.

(வசந்தன்-விடை) நாதனேயுந்தனருள் பத்தியாற்றிரிகாலம்
நழுவாமல்நடக்குதையா.

(மன்மதன்-வினு) நான்குஜாதியுங்குறைகளின்றியேசுகமாக
நலமுற்றுவாழ்ந்துவருதா.

(வசந்தன்-விடை) நலமுடனவரவர்கள் குறைவின்றிசந்தோஷம்
நாடியேவாழ்கிறார்கள்.

(மன்மதன்-வினு) தர்மமுடனேமாத மும்மாரிகள்பெய்து
தரணிகள்செழித்துவருதா.

(வசந்தன்-விடை) தப்பாமல்மும்மாரிபெய்துநம்முலகெலாந்
தழைத்துமேயிருக்குதையா.

(மன்மதன்-வினு) தயவுடன்குடிகளும் ஆறிலொருகடமையது
தவறாமல்செலுத்துறாரா.

(வசந்தன்) சரியாகஆறிலொருகடமையதுகுறையாமல்
தானவந்துசேருதையா.

(மன்மதன்) செம்மைபாய்மறுமன்னர் தேசாதிபதிகப்பஞ்
செலுத்தியேவருகிறாரா.

(வசந்தன்) தீரனேபராக்கிரம சவுரியமதாலவர்கள்
திறைபணங்கட்டிவாரார்.

(மன்மதன்) செந்தாமரைக்குளம் பூங்காவனம்பட்சி
சேர்ந்துமேசெழித்துவருதா.

(வசந்தன்) தேவியர்கள்விளையாடல் பாடலுடனேபட்சி
தினமுஞ்செழிக்குதையா.

(மன்மதன்) கொம்மைமிகுமணிமதிற் பொக்கிஷக்களஞ்சியங்
குறையறநிரம்பிவருதா.

(வசந்தன்) கொற்றவாநமதுபொக்கிஷமெலாமின்றளவுங்
குறையாமலிருக்குதையா.



(மன்மதன்) கோகிலங்கிளிபுறா அன்னமயில்தாராவுங்
கொஞ்சியேவளர்ந்து வருதா.

(வசந்தன்) குறைவின்றியேமாடகூடத்திவளருது
கொற்றவாசரணமைய்யா.

பொது-வசனம்

இவ்விதமாய் மன்மதராஜன் கொலுவிலிருந்து தேசவிசாரணை செய்யும்போது தேவேந்திர-மகாராஜன் தூதர்களுக்குச்சொல்லுதல்.

கந்தார்த்தம்-ம்-ஆனந்தபைரவி

மாதவன்வேதன்வார்த்தையைநீங்கள்
ஆதரவாக அகமதிலெண்ணி
ஓதியசங்கிதிக் குகந்துமேவந்த
தூதர்களோ நீங்கள்சென்று-மன்மதவேளை
சுருக்கிலழைத்துவருவீர்
ஓதும்நொடிக்குள்ளோடி உல்லாசமாகத்தேடி
காதல்மனோரஞ்சிதக் மன்பட்டணந்தனில் (தூதர்)

இந்திரன்சொல்-வசனம்

அகோகேளுங்கள் தூதர்களே மனோரஞ்சிதநகரத்தை யாளப்பட்ட மன்மதராஜனை நான் சொன்னதாகச்சொல்லி இப்போதே அழைத்துவாருங்கள் தூதர்களே

தூதர்கள்சொல்-வசனம்

அப்படியே-மகாபாக்கியமையா சுவாமி.

விருத்தம்

இப்படியிருக்கும்போது இயல்புடன்தேவதூதர்
தப்பிலாயிந்திரராஜன் சபைதனைவிட்டுநீங்கி
மெய்ப்புடன்காடுகாடு விட்டவர்சேதிகொண்டு
கொப்பெனமாரன்பக்கங் கூடியேவருகிறார்.

தூதர்கள்கட்டியப்பெண்களுக்குச்சொ-விருத்தம்

காமராஜேந்திரரூபன் கருதியமொழிதப்பாமல்
நேமமாய்வாசல்காத்து நிற்குங்கட்டியப்பெண்ணேகேள்
வாமனுமரசனிந்திரன் வார்த்தையென்றுரைக்கத்தூதர்
நாமுமேவந்தோமென்று நலமுடனுரைத்துவாரீர்.

வசனம்.

அகோகேளும் கட்டியப்பெண்ணே தேவேந்திர மகாராஜாவி

னுடைய தூதுவர்கள் வந்திருக்கிறோமென்று உங்கள் இராஜாவின்சமுகத்தில் சொல்லும் கட்டியப்பெண்ணே.

கட்டியப்பெண்சொல்-விருத்தம்.

அண்ணலேபோற்றிபோற்றி அவனிமூவுலகுதன்னை
கன்னல்வில்லதனுல்வென்ற சர்மாராஜேந்திரபூபா
விண்ணரசானுமிந்திரன் மேவியதூதர்தாமும்
வண்ணமாமணிமுகப்பில் வந்தனர்சரணமையா.

வசனம்.

அகோ சரணஞ் சரணமையா சுவாமி தேவேந்திர மகாராஜனனுப்பிய தூதுவர்கள்வந்து நம்முடை ஆசாரவாசலி லிருக்கிறார் களையா சுவாமி.

மன்மதன்சொல்-விருத்தம்.

மேவியவாசல்காக்கு மிருந்தகட்டியப்பெண்ணேகேள்
பாவங்களனைத்துந்தீர்க்கும் பரமனார்வரத்தினாலே
தேவருக்கரசனான தேவேந்திரன்றூதர்தம்மைக்
கூவியேநமதுபக்கங் கொப்பனவழைத்துவாராய்

வசனம்.

அகோவாரும் கட்டியப்பெண்ணே நமது ஆசார வாசலில் வந்திருக்கப்பட்ட தூதுவர்களை அதிசீக்கிரத்தில் அழைத்துவாரும்கட்டியப்பெண்ணே.

கட்டியப்பெண்-வசனம்.

அப்படியே மகாபாக்கியமையா சுவாமி.

தூதுவர்கள்சொல்-விருத்தம்.

கையுறுசிலேயாலிந்தக் காசினிதன்னைவெற்றி
செய்யுமன்மதராஜேந்திர தீரனேசரணமையா
மையலேதேவராஜன் பதிவுளசபைக்கிப்போது
ஐயனேயுமையழைத்தா ர்கையால்வருகுவீரே.

வசனம்.

அகோ சரணஞ் சரணமையா சுவாமி தேவேந்திரமகாராஜன் தேவரீரை அழைத்துக்கொண்டுவரச்சொன்னாரையாசுவாமி.

தூதுவர்கள்சொல்-கந்தார்த்தம்.

ஆதவனிந்தோ டமரர்நாடாளுஞ்
சீதவெள்ளரியான் திகழ்முனிபிரமன்
ஓதலேச்செவிகொண் டுளமகிழ்வான
மாதவன்றெய்வ மகபதிவிடுத்த.

தூதர்கள்நாங்கள்மதனே - இந்திரன்விடு
தூதர்கள்நாங்கள்மதனே.
பேதகமென்றெண்ணுமல் புறப்படுவாயிட
ஓதுமகபதிசொல் லுரைக்கும்வல்லமையுள். (தூத)

மன்மதன்சொல - கந்தார்த்தம்.

இ-டி - ஆனந்தபைரவி.

அந்தரிபக்கண்மே லலர்க்கணைதொடுக்கவோ
மின்னார்களிடைதயத்தில் மிகமயல்விளைக்கவோ
பொன்னுலயத்தில்வாழ் புரந்தரன்யோசனை
என்னகாரணந்தூதரோ - எனையழைப்ப
தென்னகாரணந்தூதரே
சொன்னுலுங்களுக்குநான் தொகைசிதிமிகத்தாரேன்
என்னுலாகவேண்டிய திந்திரராஜசபையில் (என்ன)

தூதுவர்கள்சொல் - விருத்தம்.

காரணமாங்களொன்றுங் காண்கிலோமதனவேளே
நாரதரேதோயிந்திர னுரிடமொழிபவெள்ளை
வாரணப்பரியான்விண்ணேர் வரவழைத்தார்களும்மை
சீரணிந்திந்தவேளை சீக்கிரம்வருகுவீரே.

வசனம்.

அகோகேளுமையா சுவாமி - தேவேந்திர மகாராஜன் சபைக்குபிர்மா விஷ்ணு நாரதர் முதலானவர்களும் வந்தார்கள் வந்தவிடத்தில் யாதோ ஆலோசித்து உம்மையழைத்துக்கொண்டு வரச்சொன்னுர்களையா சுவாமி,

பொதுவிருத்தம்.

இந்திரன்தூதர்வந்து இயம்பியவார்த்தைகேட்டு
சுந்தரமதனராஜன் துலங்கிடும்பணிகள்பூண்டு
தந்திரமாகவேதான் தையலர்ரதியின்பக்கம்
விந்தையாய்விடைதான்வாங்க வேள்மதன்வருகின்றுனே

கந்தார்த்தம்.

வருகிறேனென்று வார்த்தைகள்சொல்லிப்
பொருளாரண்மனையிற் புக்கியேவெளும்
பருலீலைசெய்து பக்கமேநின்று
திருமகட்கொப்பாய திகழ்பணிபூண்ட
இரதிநாயகிமுன்சென்று - தேவேந்திரனைக்கண்
டிக்ஷணம்வாரோனென்று

பரிதிபோலிலகிய படைமாதர்புடைசூழ
வருவதைகண்டிந்திரன் மகிழ்ந்தேவர்புகழ (இரதி)

மன்மதன்சொல்-வசனம்.

அகோகேளும் என்பிராண நாயகியாகிய ரதிதேவியே! என்னை தேவேந்திரமகாராஜன் அழைத்துக்கொண்டுவரச்சொன்னாராம் நான் போய்வருகிறேன் பெண்ணே,

விருத்தம்

சென்றுமேவாரேனென்று தேவியின்விடையும்பெற்று
குன்றெனப்பருத்ததோளிற் கூடப்புத்துணிபூண்டு
வெனறிடுஞ்ஜயவில்லேந்தி வீரியங்கூறிநல்ல
மன்றல்சேரிலைநுசிமாலை மதனவேளதான்வந்தானே.

மன்மதன்-தேவர்சபைக்குவருகிறதரு.

இ-ட-காயபோதி-ஆதிதாளம்.

பல்லவி.

மதனசூரந்தான்வந்தான்-திவ்விய
வாசவனிடம் பேசிடமிகுவுல்லாச (மதன)

அநுபல்லவி.

அதனப்பிரகாச மாகவே-நல்ல
அந்தரத்தொளிருஞ்சந்திரன் சுந்தரக்கவிகையாக (மதன)

சரணங்கள்.

வில்லாளிகாளென்று பேர்கூறி-இந்த
வல்லாண்மைமுனிவர்க ளாளுலும்-ஒரு
வாரிசமலராற்காதல் பாரிசமாகசேவைசெய்யும் (மதன)

பொதுவிருத்தம்.

வருவதைக்கண்டுதேவர் வகையுடனெழுந்துநின்று
இருகைகொண்டணைத்துச்சேர்த்து இசைகளைச்சொல்லிவாழ்த்திப்
பெருகுசூரிமிசைநீங்கப் பிரியம்வைத்துலகைக்காக்க
ஒருவருமிலைநீயேயென் றும்பர்கள்வணங்கினாரே.

இதுவுமது.

வணங்கியதேவர்க்கெல்லா மதனன்சாஷ்டாங்கமாக
இணங்கியேசரணமென்று இன்புறப்புகழ்ந்துபோற்றி
குணங்கிலானன்மையாகக் கூர்ந்தும்பர்சூழ்ந்திவ்விய
அணங்கயிராணிகேள்வ னருகினிற்றான்சென்றானே.

தேவர்கள்சொல்-விருத்தம்.

சென்றுமுன்னின்றவேளை திருச்சபைதனிலிருத்தி
மன்றல்சேரிலைஞ்சிமாலை மார்பனைவாருமையா

கன்றுதன்றாயைவிட்டுக் கலங்கியவாறுபோல
ஒன்றுதலரகநாங்க ளுருகினோமுருகினோமே.

தேவர்கள்-மன்மதனுக்குச்சொல்-கந்தார்த்தம்.

இ-ய்-நீலாம்புரி.

உருகியகாதையுரைப்பதுகேளீர்
பெருகியசூரர்பிலத்தினால் நாங்கள்
திருகியவாலேச்செங்கரும்பானேம்
ஒருவர்துணையுமிலலே யுள்ளதுரைத்தோமதனே
உளமிரங்கிஎங்களுக் குபகாரஞ்செய்யவேணும்
மருப்பதராஜனீன்ற பாலகிளை யீசன்சேரப்
பண்ணினாலுமக்குவெகுபுண்ணியமுண்டுமதவேளே (ஒருவம்)

மன்மதன்சொல்-கந்தார்த்தம்.

இ-ய்-நீலாம்புரி

புண்ணியன்தெட்சணா மூரணன்றவத்தை
நண்ணியேயழித்தால் நல்லதுமோதேவே
எண்ணிலாப்பொருளி லிலங்கியசுடர்முக்
கண்ணுதல்முன் செல்லலாமோ
கணைமலர் வெல்லப்போமோ
காரியமில்லாதவாத்மத பூரித்ததாலென்னபலன் (கண்)
எண்ணியமெண்ணமெல்லாமீச னிதயமறியாதுண்டோ
இந்திரனேயின்காரியத்துக் கேர்ப்படலாமோபோம்போம்
கண்ணுதல்முன்செல்லலாமோ.

தேவேந்திரன்சொல்- கந்தார்த்தம்.

இ-ம்-புன்னாகவராளி.

உதிபதிதான அழகியவேளே
கதியுனேயல்லாற் காண்கிலோம்வேறு
மதிதனிலெண்ணி மலர்க்கணைகொண்டு
ரதிபதியான மாரனே-துணிவுகொண்டு
நாதர்முன்சென்ற வீரனே
மதிவிரகங்கொண்டிடப் பண்ணுவல்லபனீயே
இதிலொருவருமில்லை ஈசர்க்குமயல்விளைக்க (ரதிபதி)
மச்சகேதன் மதனே-மலரொணும்
வாளிதொடுப்பாய் மதனே
தெட்சணமுகூர்த்தச் சிவனிமையமலையிற்
தேவியைச்சேரவிடுப்பாய்

அச்சுதனருளிய அங்கசமதவேளே
இச்சண்ந்தேவ ரிடுக்கந்தவிர்க்கவேணும் (மச்ச)

மன்மதன்சொல்-கந்தார்த்தம்.

இ-ம். புன்னுகவராளி.

பகலிரவாக பற்பலசிவன்
அகமகிழ்வெய்த அவர்க்கணைபாலே
சுகமனுபவிக்கும் தொழில்செயப்போறேன்
மகபதியானஅண்ணலே-சிவன்மேல்மலர்
வாளிதொடுக்கவென்னலேன்
நகபதிமகளான நாரியையூசன்சேர
ஜெகமலர்க்கணைகொண்டு செல்லவென்கையாலாமோ (மக)

என்கையாலாகாதையா-கணைதொடுக்க
என்கையாலாகாதையா
பொன்குவளைநாதனே-தேவேந்திர
புரந்தர துரந்தரனே
மின்கொடிபார்வதியை மேவுமணமுண்டாக்கத்
தென்கயிலைப்பதி சிவன்மேற்கணைதொடுக்க (என்)

தேவேந்திரன்சொல்-தரு.

ஆகாதென்று மதனே-தேவர்சபையில்
அறையநீதியோமதனே
மோகவிகார மதனே-மலரெய்தால்
மோசம்வருமோ மதனே
மோகாதிருந்தால்தேவர் புரிவார்கள்சாபமின்று
ஆகாதகூர ரகத்தையொடுக்கவேணும் (மச்ச)

மன்மதன்சொல்-தரு.

ஆணுருவமோபெண்ணோ-பரமசிவன்
அலியுருவமோ யிந்திரனே
தாணுவைமலர் தைக்குமோ-நெற்றிவிழியின்
தணலென்னுருவைவைக்குமோ
கோணுதலென்கையால் கூடாதுகூடாது
ஆணுவமுங்கணையு மானிடத்திற்செல்லுமோ (என்)

தேவேந்திரன்சொல்-தரு-

செல்லாதென்றே மதனே-உனதுசிந்தை
தியங்குவதேன் மதனே
மல்லாடவோ மதனே-நாங்களுந்மை
வரவழைத்தோ மதனே

எல்லாவுயிருக்கு மெனக்குந்தேவர்களுக்கும்
வில்லாளிநீயெங்கள் விசனந்தீர்க்கவேணும் (மச்ச)

மன்மதன்சொல்-தரு-

தீர்க்கநான்பாத்திரனோ-மூவர்முதல்முன்
செல்லநான்காத்திரனோ
ஆர்க்கோதுகிறீ ரிந்திரரே-என்றுஞ்செல்ல
ஆண்மையுண்டோ யிந்திரரே
பார்க்குள்நானொருவனோ பதிலொருவரில்லையோ
நீர்க்குள்தவளைபாரில் நிலைநிற்குமோயிந்திரனே (என்)

தேவேந்திரன்சொல்-தரு.

தவளையுருவ மல்லவே-உலகிற்சிங்கந்
தானுஞ்சேசீ மதனே
பவளவாயகலிகை பகத்திச்சைபாலெனக்குத்
தபமுனிசாபத்தால் சகஸ்திரயோனியாகவும்
கலமலர்ச்சரமெய்தந் நாளில்செய்ததுநீயே (மச்ச)

மன்மதன்சொல்-தரு,

செய்யவென்றுற் கூடுமோ-அயன்விதித்த
செயலும்மால்விடப்போகுமோ.
ஐயனேமையல் மூடுமோ-நினைக்குங்கணை
யரவிந்தமல ரோடுமோ
மெய்யினைப்பொய்சென்று வெல்லுமோதொல்லுலகில்
துய்யபானுவையிருள் சூழ்ந்துமறைப்பதுண்டோ (என்)

தேவேந்திரன்சொல்-தரு.

உண்டுபெண்ணும் வேதன்-வாணிப்பெண்ணை
உயர்நாவில்வைத்ததென்ன
விண்டுரந்தனிற் றிருமால்-மார்பிலந்த
மின்னாளைவைத்தவதென்ன
பண்டுரகமணிந்த பானுஞ்சடைமுடியில்
பெண்டுமைக்குக்கங்கைப் பெண்ணையொளித்ததென்ன. (மச்ச)

பொதுவிருத்தம்.

இரதியைவிட்டுநீங்கி யிந்திரன்சபைக்குச்சென்ற
உருவிலிவரவுகாணு துளமெலிந்திரதிதேவி
விரகமுமீறிபாலில் விளம்பியகுயிலைப்பார்த்தும்
பாவுதண்மதியைப்பார்த்தும் பரிந்திலைசுவாளே.

இரதிசொல்தரு-இ-ம்-கன்னடா-ஆதிதாளம்.

பல்லவி.

கூவாதேகுயிலே-கூ கூ வென்று
கூவாதேகுயிலே-உந்தன்-வாய்வலியாதோ (கூவாதே)

அநுபல்லவி.

குழறியலேகட விரைவதென்றிருச்
செவியில்நுழையவே யுடலுமுருகுதே(கூவாதே)

சரணங்கள்.

தாய்க்காகாப் பாவி-உன்னுரையாலே
தவிக்குதென் ஞவி
வேய்குழல்போல்மதன் விருதெல்லாஞ்சொல்லிச்சொல்லி
விரசமுமன மிரவுபகலிலும் வரவரமயல் பெருகிவருகுதே (கூ)

எக்காள மாளுய்-ஸ்திரீமார்களுக்
கின்பமாய்ப்போனுய்
ஒக்காதவார்த்தையை யொலிக்கிருய்கெலிக்கிருய்
உனதுஜனனமுங் கனதையாகவே
எனதுசெவியிலுந் தோணுதேநினைவுநீ (கூவாதே)

இரதி-சந்திரனேப்பழித்தல்.

காயாதே நிலவே-கனலென்மேல்
காயாதே நிலவே
காயாதேநிலவேநீ ஓயாமலடிக்கடி
கலைகளுமமுத கலசமுடையவுன்
நிலைகள்தவறிட குலசையயலென (காயாதே)

குருத்துரோகி யாகி-தாரையுடன்
கொஞ்சிய யோகி
வருசாபத்தால்வானில் வளர்ந்துங்குறைந்திரோகி
வயணவருத்தயில் பயவுசதிபங்
கயனுடனதி தயவையிலகிநீ (காயாதே)

கண்ணுதல் வேணி-கங்கையுடனே
கலைகொண்டபாணி
நண்ணுமதியேயுந்த னற்குணத்தைவிடுத்து
நளினமலர்விரி யலரியெனவுநீ
வளருமெரியேனக் களபவுடல்மிசை(காயாதே)

மன்மதன்சொல்-கந்தார்த்தம்.

இ-ம்-புன்னகவராளி.

தோடணியுமிந்திராணி துய்யமனமேமகிழும்

ஆடலன்புகழ்ந்துசொல்ல அங்கசவேள்கல்லதென்று
விடணியும்பரமசிவன் மேவும்மயலுண்டாகப்
போடுகிறேன்மலர்ப்பாணம்-காணிவிசையாய்ப்
போடுகிறேன்மலர்ப்பாணம்
அற்புதத்தும்பங்கயப்பும் பந்தொடுத்துக்கொண்டடுத்துப் (போடு)
அச்சுதன்வேத னிச்சயங்காணு
தெட்சணுமூர்த்திக் கிச்சையுண்டாக
உச்சிதநாரி பக்ஷமுமேவு
உன்மத்தங்கடத்தியே யின்பத்தைக்கூட்டிப் (போடுகி)

பொதுவிருத்தம.

போடுவதாகத்தேவர் புரந்தரன்சபையிற்சொல்லி
நாடுகொள்மனோரஞ்சித நகர்தனில்வந்துசேர்ந்து
ஆடவளிரதிவாழு மரண்மனைதன்னிலேகி
வீடுகொள்மனைவிகேழ்க்க விளம்புவான்விளம்புவானே.

இதுவுமது.

விளம்புமுன்மதனவேளும் விரகங்கொண்டிரதிவாழும்
வளம்பெறுசப்பிரகூட மஞ்சத்திலொயிலாய்ச்சாய்ந்து
பழமைகள்பேசிக்கொஞ்சிப் பாக்கிலைபருந்திகல்ல
புளகிதவாசம்பூசிப் புணர்மதவேளைப்பார்த்தே.

இதுவுமது.

தேவரீர்சென்றசேதி திருவுளம்பற்றுமென்னக்
காவிரிகங்கையான்மேல் கணைமலர்தொடுக்கத்தேவர்
கூவியவார்த்தையென்று குணமதவேளுனாக்கப்
பாவகீர்போவதென்று பதறியேயுகருவாளே.

இரதிதேவிசொல்-திபதை-இ-ம-காம்போதி-அடசாளசாப்பு.

கண்ணிகள்.

போவதுபாவம்நீர்புரந்தரன்சொற்கொண்டு பிராணநாதா-இந்தப்
புத்தியுமக்குப்போதித்தவாரார்சொல்லும் பிராணநாதா

மன்மதன்சொல்வது.

போதிப்பதாரொந்தன் புத்தியினுல்பிராண நாயகியே-எந்தன்
பூவாளியாலீசர்க் காதல்விளைப்பேனுன் நாயகியே

இரதிசொல்வது.

ஆவல்விளைக்குமோ ஐந்துமலர்க்கணை பிராணநாதா-அந்த
அத்தனிடத்தொரு நெற்றிக்கண்ணுண்டேயென் பிராணநாதா

மன்மதன்சொல்வது.

நெற்றிக்கண்ணுள்ள நிமலனென்றால் பிராண னாயகியே-அவர்
சத்தியைநீங்கித்தவஞ்செய்வதேபிராண னாயகியே

இரதிசொல்வது.

நீங்கித்தவஞ்செய்யுநேர்மையறியாமல் பிராணனாதா-மலர்
ஓங்கிக்கணைதொட உம்மால்முடியுமோ பிராணனாதா

மன்மதன்சொல்வது.

முடியாதென்றால்தேவர் முழுதும்நகைப்பாரே னாயகியே-அரை
நொடியிலசிவன்றபசை நோக்கிவாரேன்பிராண னாயகியே

இரதிதேவிசொல்வது.

வாரேனென்றுசொல்லும் வல்லமையுமக்குண்டோ பிராணனாதா-வீண்
வார்த்தைபடியாதேபார்த்தோர்நகைப்பார்கள் பிராணனாதா

மன்மதன்சொல்வது.

நகைத்தபேர்களும்நாண நன்மலரால் பிராண னாயகியே-அந்த
நஞ்சுண்டோன்தபமதை நாசஞ்செய்வேன் பிராண னாயகியே

இரதிதேவிசொல்-கந்தார்த்தம்.

இ-ம்-நாதநாமக்கிரியை.

அழித்திடுவேனென் றகந்தையதாக
மொழிந்திடப்போமோ மூர்த்தியாமீசர்
விழிநுதற்பொறிவெண் ணீறெனச்செய்யும்
பழிநீசுமக்காதே காமா-அந்தப்
பாவம்நம்மைவிட்டுப் பக்கம்விலகிப்போமா
துளிர்குளிர்சரமெய்யும் பூமா-பரஞ்
சோதிமேற்கணையது தொடுக்கவுமாமா (பழிநீ)

மன்மதன்சொல்-கந்தார்த்தம்.

இ-ம்-நாதநாமக்கிரியை

தொடுப்பதுமலரால் சோதிமேற்பாணம்
விடுப்பதுமில்லை வேதனார்சொல்லை
அடுப்பதிமையமலை யருகினிலீசன்
உடுபதிமுகத்துமை நாரிதன்னுடன்
கூடும்படிசெய்யப் போரேனான் சாரி
எடுப்பதுமலர்க்கணை மாரி-தேவ
ரிடுக்கந்தவிர்க்கவேநானதிகாரி (உடுபதி)

இரதிதேவிசொல்-கந்தார்த்தம்.

இ-ம்-ஆகிரி.

தேவர்கள்சபைக்குச் செல்லயிலோர்பெண்

ஜோதியெனக்கதறிக் குளவையிட்டழுதாள்
காவலனான காமனையின்று
போவதுநீதியல்லவே-சிவன்மேற்கணைதொடுக்கப்
புரந்தரன்சொன்ன போதனைக்குட்பட்டு (போவது)

ஆவல்வினைக்கவேயென்னாலும்-எங்கள்
அரியருளியபாலா
மூவர்முதல்வெட்சனை
மூர்த்தியின்தபத்தைப் பார்த்திடத்தீர்த்திடப் (போவது)

மன்மதன்சொல்- கந்தார்த்தம்-இ-ப-பூவி

மூர்த்திமலரால் முனிவுகொள்வாரோ
ஆத்திமாமலரை யணியவுமில்லையோ
கேத்தியதாக நிமலனைக்கண்டால்
பார்த்திக்ஷணமேவருமேன்-சுகமாகஅனுப்புவாய்
பஞ்சணைமீதினில் கொஞ்சிடுவோய்பெண்மணி (பார்த்தி)

வார்த்தைக்குமேதில் வார்த்தைசொல்லாதே
மங்கைப்பெண்ணாரதி மாமாதே
கார்த்திகேயனைப்பெறக் கணைதொடச்சிவனுமைமையைச்சேரவே (பா)

இரதிதேவிசொல்-கந்தார்த்தம்.
இ-ம்-சங்கராபரணம்.

அச்சுதனைகுறும்வேளே அறிவதுடையவ்விடென்மேற்
பக்ஷமுமறந்துசொன்னபடியொழியேனோதேது
லெக்ஷணவெளியின்மத்திநிலைக்கொளுக்கிரியின்சார்பில்
தெக்ஷணாமுகூர்த்தங்கெடச் சிவன்றபசையழிக்க
அச்சுதன்மகனேவும்மா லாகுமோபோம்போம்

மன்மதன்சொல்-தரு

அருந்திராணிகள்மல ரம்புசெயுந்தொழில்கள்
போகுமுன்சொல்லவோ பெண்ணே
புரியுமோ கண்ணே

ரதிதேவிசொல்-தரு.

கண்ணுதல்விரோதியர்கள் காலனுடையவர்கள்நீ
சொன்னுதல்நடவாதுகா ணென்பிராணநாதா

மன்மதன்சொல்-தரு.

நடவாதுலகிலுண்டோ ராஜன்மன்மதன்சென்றால்
விடக்கிரீபனுக்குமயல் விளைவிப்பேனென்பாராய்

இரதிதேவிசொல்-தரு.

பாரும்பாருந்தக்கனைப் பங்கஞ்செய்ததையுந்தன்
ஆரபார்மெல்லா மானறியாரோ

மன்மதன்சொல்-தரு.

அறிந்தால்கன்னைக் கரைப்பசுமை யாகச்சுமப்பதுண்டோ
எறிந்தால்மலைமகளுக் கிச்சைகொள்வாரோ

இரதிதேவிசொல்-தரு.

இச்சையதுருபிக்குண்டோ என்னவார்த்தைசொல்லவந்தீர்
பக்ஷமுமாய்ப்பட்சமில்லாப் பக்தரிதயன்

மன்மதன்சொல்-தரு.

இதையங்கலக்குங்கண்ணே பென்னிடத்திலுண்டுபெண்ணே
உதையமார்த்தாண்டனைப்போ லுள்ளுடல்தீய்க்கும்

இரதிதேவிசொல்-தரு.

உள்ளுடலைத்தீய்த்தாலுந்த னுயிர்பிழைக்குமோமகனே
வள்ளல்விழியக்கினியால் மாளக்காலமோ

மன்மதன்சொல்-தரு.

காலமும்வசந்தனுலே கன்னு கலானுறுமென்ன
கோலமலர்விரகமூட்டுங் கூறுதல்கேளாய்

இரதிதேவிசொல்-தரு.

கூறுதல்நீருகவோநீர் கொற்றவரோபோகவேண்டாம்
மாருதத்தேருக்கினம் வந்திடுஞ்சொன்னேன்

மன்மதன்சொல்-தரு,

சொன்னசொல்லைத்தட்டுவது சுகப்பெண்களுக்கழகோ
மன்னவன்வார்த்தைக்குப்பதில் வார்த்தைசொல்லாதே

இரதிதேவிசொல்-ஒருவிதசந்தார்த்தம்-இ-ம்-சங்கராபரணம்.

சொல்லேன்மறுவார்த்தை துய்யமதனேசிவன்பாற்
செல்வாய்மயல்விளைக்கச் சிக்கெனவே
சல்லாபமாகச் செல்லுவீர்-சிவனிடம்போய்
வல்லாண்மையாகவெல்லுவீர்
எல்லாவுலகர்க்கு மித்திரர்க்குந்தேவர்க்கும்
விள்ளாளிபென்றுபேர் விளங்கப்புவிதுலங்க (சல்)

மன்மதன்சொல்-விருத்தம்.

ஆடாவசந்தாயிப்போ தனைகொடி தனிற்குள்ளாகப்
பார்புகழ்தபஞ்செயீசன் பக்கான்போகவேண்டுங்
காரொனும்புரவிகிள்ளைக் கவிகைசாமரங்கள்தென்றல்
தேரதையலங்கரித்துச் சீக்கிரங்கொண்டுவாராய்.

வசனம்.

அகோவாரும் பிள்ளாய் மந்திரி நாம் பரமசிவந்தபஞ்செய்யு மிடத்திற்குப்போகவேணும் அதிசீக்கிரமாய்தென்றற்றேரையலங்கரித் துக்கொண்டுவாரும்பிள்ளாய் மந்திரி.

வசந்தன்சொல்-விருத்தம்.

அரசனேஅனங்கராஜ அண்ணலேயடியேன்றங்கள்
உரையதுதவறிடாம லொருநொடிகனிற்குள்ளாகத்
திறமுளபடையுந்தென்றற் றேரையுமலங்கரித்து
விரைவுடன்கொண்டுவந்தேன் வேந்தனேசரணமையா.

வசனம்

அகோ சரணஞ்சரணமையா சுவாமி தேவரீ ருத்தாரப்படியேசம் முடைய பெண்சேனைகளையும் தேரையும் அலங்கரித்துக்கொண்டு வந் தேனையா சுவாமி.

பொதுவிருத்தம்.

அந்தமேதார்தென்றற்றேரை வலமவந்துமதனராஜன்
முந்தவேதூபமீய்ந்து முடியதுவணக்கியேறி
துந்துமிமுழங்கமாதர் சரதநாட்டியங்களாட
இந்தணிந்தோனைநாடி யிலங்கவேவருகின்றானே.

இதுவுமது.

இப்படிமதனராஜ னீசன்வாழ்கிரியைநாடி
செப்பமாய்த்தேரிலேறிச் சீக்கிரம்வருகும்போது
தப்பதாய்ச்சகுனங்கண்டு சடுதியிலெழுந்துமந்த்ரி
கொப்பெனமாரன்முன்னே கூறுவான்கூறுவானே.

வசந்தன்சொல்-திபதை.

இ-ம்-பிலகரி-அடதாளசாப்பு.

| | |
|---|---|
| கண்ணின்முன்னே தும்சகுனங்கள் காணுது | மன்னனுரே-இது |
| வன்னவினைகளோ யேதோவறிகிலேன் | மன்னனுரே |
| கரையானுங்கட்டுது நாவிமுன்னுரத்து | மன்னனுரே அதோ |
| நிரையாகவேடர்கள் கேடபியழுகிறர் | மன்னனுரே |
| வேதியனொருவனும் விதவையுமுன்வாரார் | மன்னனுரே-பொல்லா |
| வாதனையாமிது வந்துபின்னேகுவோம் | மன்னனுரே |
| வலியனுங்கட்டுது மனந்துயராகுது | மன்னனுரே-நாம் |
| கலியாகவுஞ்சாரை நடுவாகவோடுது | மன்னனுரே |
| தவசியுந்தட்டானுந் தாமெதிர்வாரார்கள் | மன்னனுரே-இப்போ |
| அவசியம்பிராணனுக் கமடுவருமையா | மன்னனுரே |

காகமொன்றோடொன்று கட்டிப்புரளுது மன்னனாரே-இது
சாகின்றகுறி தப்பாதுசொன்னேன்காண் மன்னனாரே
காளிகூளிமுண்டங் கண்டம்நின்றாடுது மன்னனாரே-இந்
நாழியிற்செல்வோம் நமதுநகருக்கு மன்னனாரே
தக்கசகுனங்கள் தள்ளிநடந்தாலே மன்னனாரே-இப்போ
அக்கினியாகுவீரண்ணலேதப்பாது மன்னனாரே
பொல்லாச்சகுனங்கள்போகவொண்ணாதையாமன்னனாரே-இது
நல்லதல்லவென்று நாளைவருகுவோம். மன்னனாரே.

மன்மதன்சொல்-விருத்தம்.

மேவவொண்ணாதென்றுரைத்த விவேகமந்திரியேகேளாய்
சாவதும்வாழ்வதெல்லாஞ் சதாசிவன்செயலல்லாது
ஆவதுவேறுமில்லை யானதால்வசந்தாவிப்போ
தேவனாமீசன்பக்க[illegible]தனைநீநடத்துவாயே.

வசனம்.

அகோவாரும்பிள்ளாய்மந்திரி இந்தசகுனங்களை தடுத்துப் போனால் நமக்கு அபஜயம்வருமென்று சொல்லுகிறாயல்லவா சாவதும்பிழைப்பதும் விதியின்பிரகாரம் நடக்குமேயல்லது வேறில்லை நீசந்தோஷமாய் தேரை நடத்தும்பிள்ளாய் மந்திரி.

மந்திரிசொல-விருத்தம.

மதியினாலறிந்தநீதி மார்க்கனாயுரைத்தேனுங்கள்
விதியின்றன்பயனையிப்போ வேந்தனேயறியமாட்டேன்
துதிபெறுமாசேயுந்தன் சொல்லதுதவறிடாமல்
அதிதுரிதத்திற்றேரை ஐயனேவிடுவேன்பாராய்.

பொதுவிருத்தம்,

விளங்கியசந்திரன் வெண்குடையாகத்
தளங்கள்பெண்கூட்டந் தளிர்சரம்விளங்க
இளங்குயிற்காள மிரைகடல்முரசு
உளங்கனிகிளியெனு முன்னிதத்தாலே.

இதுவுமது.

பூண்டிடுந்தென்றற் பொற்றேரேறி
காண்டிபத்தொடுமலர்க் கணைகளுமேந்தி
தாண்டியமாதர் தளங்களுஞ்சூழ
ஆண்டியாமீச னண்டையிற்சென்றே.

மன்மதன்சொல்-கந்தார்த்தம்-இ-ம்-மாஞ்சி.

சென்றிமையவரையில் செட்சணமுகூர்த்தன்
றன்றிசைநோக்கித் தனுசில்நாணூட்டி

நின்றிடமாரி நிமலனார்மீதில்
மன்றல்மலர்வாளியை மார்பினிலெய்குறேன்
கொன்றைபுனைவேணியரன் குமரியைச்சேரவும்
அன்றுசண்முகக்கடவு ளவதரித்திடவும் (மன்றல்)

பூசுரரும்வாசவரும் பொன்னுலகில்விண்ணவரும்
தேசுலவுமீசனெனுந் தெட்சணாமூர்த்தியின்மேல் (மன்றல்)

வேறு-கந்தார்த்தம்-இ-ம்-மோகனம.

நிந்தைசெய்தக்க னிலைகெடச்செய்தே
எந்தையாமீச னிமையமலைச்சார்பில்
விந்தையாமவுன மிகுதவமீங்கச்
சிந்தைகலக்குமர விந்தமலராலீசன்
தெட்சணாமுகூர்த்தஞ் சிதைப்பேன்
அந்தமலைபரச னருளியபாலகியைச்
சந்திரசேகரன்சேர்ந்து சண்முகனைப்பெறவே (சிந்தை)

பந்தபாசமிகழ்ந்த பத்தர்சித்தர்பணியுஞ்
சுந்தரமூர்த்தியாய்த் துலங்கும்பரஞ்சுடரை
கந்தவசந்தம்வீசக் கலைந்தருள்பிரகாச
சந்தக்குயிலுமேசச் சமுத்திரமுஞ்செவிகூச
தந்தைமுகுந்தன்சொன்ன சாடைப்படிக்குவேதன்
இந்திரருக்குணாசெய்த யத்தனைப்படியேயீசன் (சிந்தை)

விருத்தம்.

காதலாயீசன்செய்யுங் கடுந்தபங்குலைப்பேனென்று
வாதுகள்கூறியேதன் மாருதத்தேரிலேறிப்
போதவேவெற்பைநாடிப் போய்மதராஜன்றானும்
நாதனார்தபத்தைக்கண்டு நடுங்கிமெய்யொடுங்கினானே.

இதுவுமது.

கர்த்தனேசிவனேயுந்தன் கடுந்தபங்கண்ணிற்காணச்
சித்தமுநடுங்குதிப்போ தேவர்க்குவாக்களித்தேன்
அத்தனேபரனேயென்று அஞ்சியேநடுநடுங்கி
மெத்தவும்பயந்துமாரன் விருடன்தெறினனே.

இதுவுமது.

தேறியேயெழுந்துமாரன் செங்கையிற்சிலைவளைத்து
வாரியேபுஷ்பபாணம் வள்ளல்மேல்தொடுத்தானப்போ
காரியங்காளன்மெத்த நடுங்கியேமயங்கிமோகம்
பூரிதமாகிச்சிந்தை பொருந்தவமறந்திட்டாரே.

ஈஸ்பரன்சொல்-விருத்தம்.

ஏதடாவொருகாலத்தி லிப்படிகண்டதில்லை
போதவேதென்றல்வாடை புளகிதமாகுதிப்போ
நாதகீதங்கள்வண்டு நற்குயிலகதம்பவாடை
காதலேதென்றுயீசன் கண்ணதைவிழித்திட்டாரே.

பொதுவிருத்தம்.

கலங்கிடயீசன் கனலெனும்விழியால்
இலங்கியேநோக்க யிரதமுங்கிளியும்
பிலங்குறைந்தோடிப் போயுருவேறாய்
மலங்கியவிருளெனும் வடிவமதாச்சே.

இதுவுமது.

ஆனையிளிந்து மரும்பச்சைக்கிளியும்
வானுயர்குயிலும் வசந்தனுங்கலங்கித்
தேன்மொழிமட்வார் படைகளுந்தியங்கி
கான்விழியீசன் கனலெழச்சினந்தே.

இதுவுமது.

சினந்தெழுநெற்றித் தீயினல்மதவேள்
மனதிடங்குன்றி மரகதவடிவிற்
கனத்தெழுபச்சை யுருவமுங்கனலாய்
வனத்திடைபிணம்போல் மாண்டெரிந்தனனே.

இதுவுமது.

மாண்டபினிரதி மாளிகைதேடி
ஆண்டவனிறந்த வக்கணந்தென்றல்
பூண்டிடுங்கிளியும் பூரணமதியுந்
தாண்டியகுயிலுஞ் சாவுரைத்ததுமே.

இதுவுமது

சாவுரைகேட்டுத் தயங்கியேரதியும்
ஆவுரைதள்ளியழற்கிரையான
கோவுடனிருந்து குலவுதல்நினைந்து
பூவுலகினிலே புரண்டழுவாளே.

இரதிதேவி-புலம்பல்-திபதை-இ-ம்-புன்னுகவராளி-ஆதிதாளம்.

கண்ணிகள்.

| | |
|---|---|
| ஐயையோவென்செய்வேன் | மன்மதா-எனக் |
| காதரவாரினி | மன்மதா |
| செய்யமலர்கொண்டு | மன்மதா-நீர் |
| செல்லுமுன்சொன்னேனே | மன்மதா |

தியாச்சுதோவுடல் மன்மதா-உந்தன்
சிலையுங்கணையும்போச்சோ மன்மதா
கையாலுனைவாரி மன்மதா-நான்
கடன்தீர்க்கவில்லையே மன்மதா
துய்யவதனமுஞ் சூர்யப்பிரகாசமும்
தீயாலெரிந்துநீர் சிரணமானீரோ (ஐயை)

என்னசெய்வேனையோ மன்மதா-மன
தெப்படியாறுவேன் மன்மதா
உன்னையல்லால்வேறு மன்மதா-எனக்
குற்றதுணையுண்டோ மன்மதா
முன்னமேசொன்னேனே மன்மதா-வெகு
மூர்க்கமாய்ச்சென்றீரோ மன்மதா
அண்ணல்விழியாலே மன்மதா-நீர்
அக்கினியானீரோ மன்மதா
சின்னவயதினி லென்னைவிந்தக்கோலம்
பன்னநினைத்திரோ கன்னற்சிலையோனே (ஐயை)

விருத்தம்

நீரணிவேணி நிமலர்முன்சென்ற
ஏரணிமதனணிறக்கபின்குயில்முனுங்
தாரணிபடைமுனுஞ் சமுத்திராதென்றல்
சீரணிமதிமுனுந் திகைத்தழுவாளே.

இரதிதேவிபுலம்பல்-தரு.

இ-ட-சௌராஷ்டகம்-அடதாளம்.

பல்லவி.

பூரணச்சந்திரோதயமே புருஷசிகாமணிமாண்டாரோ

அநுபல்லவி.

காரணமிந்திரர்சொல்லால் கடவுள்நெற்றிக்கண்ணினாலே
சீரணமானாரோநாதன் சிந்தைகலங்குதென்செய்வேன் (பூரண)

சரணங்கள்.

வாரிதியேகோகிலமே வஞ்சிமாரேயஞ்சுகமே
மாருதமாகியதேரே மலர்தண்டலையின்வண்டே
யார்தனிற் பிராணநாதன்
பட்டாரோவுயிர் விட்டாரோசொல் (பூரண)

இரதிதேவிசொல்-கந்தர்த்தம்.
இ-ட-நாதநாமக்கிரியை.

ஆரணன்சிவனரி யமரருமசுரரும்
பூரணவமுர்தம் பொசித்திடவெண்ணி
காரணப்பாற்கடல் கடைந்ததிற்பிறந்த
பூரணச் சந்திரனேபிராணனுந்தன்
புகைந்தரோசந்திரனே
தோரணங்கொடுசது ரங்கங்களையும்விட்டுத்
தியானுரோசந்திரனே
யாற்கடல் சந்திரனே-நானென்ன
பாவஞ்செய்தேன்சந்திரனே-மலர்
கோரம்புத்தூணியுங்கைக் கோதண்டமும்பற்றிக்
கொண்டெரிந்துதோ சந்திரனே
இரதயிளந்தென்றலே-இன்பசுகசாமிக்
கினியவிளந் தென்றலே-இப்போ
காதலமுநாதன் கணையுந்திபாச்சுதோ
கந்தயிளந் தென்றலே
இரதமாகிய தென்றலே-மதவேளும்
ஏறுமிளந் தென்றலே
சுரதத்தொழிலுமவர் சுந்தரமும்வெந்து
தூளானுரோ தென்றலே
ஏன்கூவுகிறாய் குயிலே-மதவே
ளெங்கேகருங் குயிலே-இப்போ
தேன்மொழிபதறியென் சிந்தைகலங்குதென்
செய்வேன்கருங்குயிலே
வரவாகருங் குயிலே-எந்தன்மத
னெங்கேகருங் குயிலே-பாவி
தேவாதிதேவரால் சித்தசன்மாண்டாரென்
செய்வேன்கருங் குயிலே
காமன்படைப் பெண்களே-மிகு
காதல்படைப் பெண்களே-கலைச்
சோமன்கவிகைகொள் சுந்தரன்வெண்ணீராய்
துஞ்சாரோபடைப் பெண்களே
பருவப்படைப் பெண்களோ-மங்கைபஞ்ச
பாணன்படைப்பெண்களே-பச்சை
யுருவமுநீறுகி யொளித்தாரோமன்மதன்

ஓகோபடைப் பெண்களே
தண்டலை வண்டுகளே-மதுமலர்த்
தார்மதன் வண்டுகளே-இப்போ
மண்டலம்புகழ்தெக்ஷண மூர்த்தியால்மதன்
மாண்டாரோ வண்டுகளே
சிலைநாணி வண்டுகளே-கீதங்களைச்
செப்பிய வண்டுகளே-இப்போ
நிலையிமையமலைச்சாரில் நித்தனால்மதவேள்
நீறானரோ வண்டுகளே-

பத்தியம்.

இ-ம்-காம்போதி.

துரைராஜராஜனே சுகுணகல்யாணனே
நிறைமாதர்படைகொண்டநீதிபரனே
வரையானதோளனே மகிழ்மலர்மார்பனே
உரைகொண்டகொக்கோகஉதிதிந்தே
கரையாவஜீகரா கனகாம்புயானனே
அரைகொண்டவல்குல்மாளிகையரசனே
திரைகொண்டவுலகெலாஞ் செங்கைமலர்வாளியால்
வினைவுடனினைக்குமுன்விரகாக்கினி
உண்டுசெய்யுனதுவல்லபமுமெளிதோ
மண்டலம்புகழ்திவ்விய மதனதுரையே
முண்டகாசனனிட்ட முறைமையாலே
கண்டதெக்ஷணசிவ னைகலைநாதா.
இராகபுலம்பல்-தரு-இ-ம-கண்டா-ஆதிதாளம்.

பல்லவி.

சாம்பசிவனால் மதனே தாணிதனிலேமதனே
சாம்பலானீரோமதனே சரசகுணனேமதனே

அநுபல்லவி.

போய்போதுசொன்னேனேபாவி புரந்தரன்புத்திக்குள்ளாகி
சாம்பசிவனால்மதனே

சரணங்கள்.

என்னசெய்வேன்மன்மதனே யெரிந்திரோமன்மதனே
கன்னற்சிலைமன்மதனே காண்பதெப்போமன்மதனே
சின்னஞ்சிறுநாளையிலே திக்கில்லையானீரோசாமி (சாம்)

தேவர்முதல்யாவரையும் திவ்வியமலரினாலே
ஆவல்செய்யுமன்மதனே அம்புவியிலேயெங்காளும்
பாவிதுன்பமேயனையப் பட்டீரோவுயிர்விட்டீரோ (சாம்)

சந்திரக்குடையுஞ்செய்பொன்தங்குமார் கரும்புவில்லுஞ்
சுந்திரக்குயிலுமாயத் தோகையர்படையைவிட்டு
வெந்திரோமதனேமனம் வேகுதேயெனக்கமெல்லாம் (சாம்)

பத்தியம்-இ-ம-நாதநாமக்கிரியை.

அதிரூபசித்ரனே யழகியவிசித்திரனே
மதியிலுமொளிவான வதனமுகிலே
நிதிகோடிபொன்பெற்ற ரத்தினமணிமகுடனே
விதிகொண்டகாம நூல்விதரணகுண
முதிரானமார்பனே மோகனகல்யாணனே
ததிகொண்டகோபாலர்தந்தமதனே
துதிகொண்டவைங்கணைத்தொழில்வீரமாரனே
மதிகொண்டவிற்பனமதனதுரையே
கதிபுனையல்லாதுவேறுகாணன்
நதிபதிமுன்சென்றநாசமான
அதிபதியுன்னையானென்றுகாண்பேன்
விதிவசமிப்படிவிளைந்ததோவேந்தனே.

தரு-இ-ம-நாதநாமக்கிரியை-ஆதிதாளம்.

புருஷசிகாமணியே-ஐயோ நாதா-என்னைவிட்டுப்
போனீரோ வெண்ணீறுனீரோ யென்செய்வேன் (புருஷ)

பொருசரசமலர்ப்போடச்சென்றுவாரோ னென்றுசொன்னீரே
வருஷயிமையமலே வாரத்தில்தபசான
இருஷிசிவன் கண்ணு லெரித்தாரோ சிரித்தாரோ (புருஷ)

கன்னற்சிலை கையனே-அதிகாரதீரவீரமுள்ள
மின்னற்பிரபை மெய்யனே
சொன்னபடிகேளாமல் தூளானீரோசாமி
மன்னவனேயென்னை மருவிடவாவெய்யோ (புருஷ)

பத்தியம்-இ-ம்-ஆகிரி

திலகநேயனேசெங்கண்மால்சேயனே
செகமெலாமைங்கணைசெலுத்தவோனே
கோதிலாமொழியனே கோகனகவிழியனே

கோதைமார்படைகொண்டகோலவானே
சோதிமாமுடியனே துலங்குமின்கொடியனே
சோராதகோகிலச்சுத்தியுள்ளானே
வீதிவார்முரசனேவேந்தர்க்குவேந்தனே
வீசிதென்றலிலேறும்விஸ்தாரனே

பாதகக்தேவர்தின்பாவிலோதும்
போதனைக்குள்ளாகிப்போறேனென்றீர்
மாதுநான்சொன்னசொல்மறந்துபோனீர்
வேதனார்விதியினால்வெந்துமாண்டீர்பிராண

த-ரு-இ-ம்-ஆகிரி-அடதாளசாப்பு,

நாதாநாதா-ஐயோ-ஐயோ-நாதாமடிந்தீரோ
நகைகணக்கினிக்கலைனால்
வேதாவிதித்த விதிப்படியேபிராண (நாதா)

வாரிதிமுரசுகன் வரிக்குயிலெக்காளமும்
மாருதத்தேரைவிட்டு பிராணநாதா-வெள்ளை
வாரணன்சொற்கொண்டு வகைமோசத்துக்குட்பட்டு
மாண்டெரிந்தீரோயெந்தனாண்டவனேபிராண (நாதா)

வீரியசவுரியமும் வீரதீரமுமுந்தன்
காரியமெங்கேபோச்சோ பிராணநாதா-இப்போ
வாரிதிசூழிமைய மலையருகினிலீசன்
மாதவமழிக்கவே பாதகனெரித்தாரோ (நாதா)

கந்தார்த்தம்-இ-புன்னாகவராளி-ஆதிதாளம்.

தென்பொதியாசலத் தேரின்மீதேறி
தன்படைமாதர் தளங்களுஞ்சூழ
இன்புறவேசென் றிறந்தபின்நானினி
என்செய்வேன்மன்மதா-இந்தவிதிக்குப் பாவிநான்
என்செய்வேன்மன்மதா
முன்செயததீவினை முடிந்துதோமடிந்தீரோ (என்செய்)

தென்கயிலைபபதி சிவன்மேற்பூவாளிதொட
மின்கனல்விழியினால் வெந்துயிரிழந்தீரோ (என்செய்)

காமனேயென்னுயிர் காதலனேபூதலத்தில்
சோமசேகரர்பாஞ் சோதியுமைமாயத்தாரோ
தேமற்பொன்மார்பனே சித்திரவதனரூபனே (என்செய்)

கந்தார்த்தம்-இ-ம்-சங்கராபரணம் ஆதிதாளம்.

அதனவிற்பனமு மழகியவடிவும்
மதனைமும்படையும் மகரங்கணைச்சிலையும்
பதறியேசென்று பரமன்முனின்று
கதறியேநெற்றிக் கனலெரிபட்ட

மதனேநீர்தான்மாண்டபின் நானிருந்து
வாரியெடுப்பதென்னபார்தனிலே திருமால்
சுதனேநீர்தான்துஞ்சபின் நானிருந்து
சுகத்தைப்பெறுவதென்ன ஜகத்தனிலே ஐயோ

வயிறுங்குடல்குலைபற்றி யெரியுதே
மாண்டெரிந்தீரோயெந்தனாண்டவனே பாசக்
கயிறுகொண்டுபகடேறி எமனுன்னைக்
கட்டியெமபுரத்துக்கிட்டாரோ ஐயோ

பச்சைப்பசுமேனி யுந்தனழகைப்
படுநீலிகொடும்பாவி பார்த்தாளோ எந்தன்
இச்சைக்கணவனேநீர் [illegible]யநான்
இங்கிருந்தாவதென்ன [illegible]சனே

கூடியென்னைக்கொஞ்சியணைந்த கைநீங்
கோவையிதழ்க்கனிசர்க்கரைவாயும் என்னைத்
தேடியன்னம்போல்வருங்கால்கள் . ரண்டுங்
தேகமுமுழுதும்வெந்துதீயாச்சோ ஐயோ

ஒயிலுமுந்தனடையழகுங் கைவீச்சும்
உல்லாசவார்த்தைசொலுஞ்சல்லாபங்களைக் கண்டு
குயிலுந்தங்கள்குலமென்று தொடருமே
கூடிப்பிறிந்தஅன்றிற்பேடானே ஐயோ

இனியாதரவாரெனக் குன்னைப்போலே
யிங்கிருந்தென்செய்வேனங்கசனே துரையே
தனியேயிருந்தென்னைப் புலம்பவைத்து
சாரிசெய்தீரோயெந்தன்வீரியனே துரையே

காய்க்குங்கதிர்கழுத்தை விட்டேகுமுன்னே
காமனைமடிந்தீரோபூமியிலே எனைக்கண்ட

நாய்க்குஞ்சொல்லுக்கிடமாச்சுதே | ஐயோ
நான்கொண்டபட்சமெல்லாம்போச்சே | இப்போ
கட்டுஞ்சுபமங்கிலியப் | பெண்களைக்
கண்டுமறையவுமுண்டகன்விதித்தானே | சரிகை
பட்டொத்தினைப்பணியால் | ஆவதென்ன
பார்த்திங்கிருந்தால்சீரழிவேன் | ஐயோ
சாவாபென்றுநானறிந்தால் | உன்னைத்
தனியேயனுப்புவேனோநான்பாவி | சற்றும்
கூவாமலென்னையிங்கே | விட்டுக்
கொற்றவனேமாண்டபோ | சித்தசனே

கந்தார்த்தம்-இ-ம்-மணிறங்கு-சாப்புதாளம்.

அத்திரப்புதையு மாகமுமனலாய்
கத்தியுங்கமலக் கைகளுந்தியாய்ப்
சித்தினிமாதர்படை களுஞ்சிதைய
நித்தன்முன்சென்றுயிர் நீங்கியயெந்தன்.
சித்தசனேசித்தசனே-ஒரு-முத்தங்கந்தெந்தனைச்
சேரவருவதென்று பாரிலெனைப்பிரிந்துமறைந்த

உத்தமனேஉத்தமனே | யுலைவாய்மெழுகதுபோ
லுருகிறேனுடல் | கருகிறேனுன்
னுடன்வருகிறேன் | திடமதாகியே
பச்சைமரகதமெய்யனே | மச்சதுவஜக்கையனே
பங்கஜவதன | மங்களமிருந்த
பஞ்சமலர்க்கணை | யஞ்சுஞ்செலுத்திடும்
அச்சுதன்மால் மகனே | எனைப்
சித்திடும் வல்லபனே |
அத்தனிடம்போகச் | சித்தந்துணிந்தென்னை
அந்தரத்தேவிட்டுத் | தந்திரமாய்ப்போன(சித்தச)

கந்தார்த்தம்-இ-ம்-ஆனந்தபைரவி-ஆதிதாளம்.

அன்னையாள்வயிற்றி லவதரித்தையோ
முன்னையாலுன்னை முயங்கியபாவி
பின்னையாதரவைப்பெற்றிலேனின்று
உன்னைவிடவேறுதாவு-என்பிராணனுதா
உலகிலொருவரில்லையே
என்னசெய்வே னேதுசெய்வேன்- என்பிராணனுதா
இறைவன்விதித்த விதியோ

சின்னஞ்சிறுவயதிலேநான் — என்பிராணநாதா
சிறையிலிருக்கும்படி செய்தீரோ
கன்னற்சிலையுங்கணையும் — என்பிராணநாதா
கனல்விழிக்கிரை யானீரோ
மன்னவனேயென்னசெய்வேன் — என்பிராணநாதா
மடிந்துயிர் விடுத்தீரோ
அந்நாளிலென்வார்த்தை — என்பிராணநாதா
அனேகவிதங்களாகவே
சொன்னாலுங்கேளாமற்போனீர் — என்பிராணநாதா
சுடர்விழிக் கிரையானீர்
தன்னாலேதான்மடிந்தீர் — என்பிராணநாதா
சாம்பசிவனாலிறந்தீர்

கந்தார்த்தம்-இ-ம-நீலாம்புரி-அடதாளம்.

சிவனுதற்கண்ணால் தீயுருவான
தவமிகுநாதா தாரணிதனிலே
நவமிகுகொடிய "காயடியாளைப்
புவனமதிற்பிரிந்து — பொரியுருவாயெரிந்தீர்
புலனொழிந்தீரோ — பிராணநாதா
க்வனத்தைமறந்தீரோ — கன்னியைப்பிரிந்தீரோ
கண்ணாளாயெந்தன் — பிராணநாதா
பவயோயென்தலைவிதிப் — பபனோஉமையிழந்தேன்
பாதவிப்பேனோ — பிராணநாதா
மவுனங்கொள்சிவன்மீதில் — மலர்க்கணையைத்தொடுத்து
மாண்டெரிந்தீரோ — பிராணநாதா
தேவரிந்திரன்சொற்கேட்டுத் — திருமகனுஞ்சென்றீரோ
திரும்பிவரவுங்காணேன் — பிராணநாதா
ஆவலாகச்சென்றீர் — அரனுதற்கண்ணினாலே
அனலாயெரிந்தீர் — பிராணநாதா
அவனிமுழுதுமாண்ட — ஆண்மையுமொழிந்ததோ
ஆண்டவனேயென் — பிராணநாதா
சகுனியைப்போலவே — சண்டாளனாரதனுஞ்
சதிமோசஞ்செய்தான் — பிராணநாதா
சூரதிசிவன்மீதில் — தொடுத்தீர்மலர்க்கணையைத்
தொல்வினைப்பயன் — பிராணநாதா
வீரதிவீரனே நீ — வேதன்சாபத்தினாலே
வெந்துமடிந்தீர் — பிராணநாதா

கந்தார்த்தம்-இ-ம்-முகாரி-ஆதிதாளம்.

திரையொலிமுரசுந் தேர்வசந்தனையும்
வரைசெறிதனத்தார் மங்கைமார்படையும்
நிரைசரிந்தோட நிமலனால்மாண்ட

அரசேதுரைமதனேபெண்கட் கழகாகியமதனே
அனலாகநீயெரிந்ததென்ன அடியாள்தலைவிதியோ
வரைசேர்புயதேவேந்திரனும் வானோர்களும்பிழைக்க
மதனேயும்மைக்கொல்லவென்று வந்தார்தூதரழைக்க

இந்தவிதியறியாமலே யிந்திரன்சொன்னவுரையே
ஏதோதெய்வவிசுவாசமென் றெண்ணினீரோதுரையே
நொந்தேயடியாள்சொன்னசொல் நூறுங்கடந்தீரோ
நொடியாகத்தேரேறிதெய்வ லோகங்கடந்தீரோ

ஆசைவலைவீசுந்தேவர்க் காளாய்பணிகேட்டீர்
அஞ்சாமலேசிவன்மீதினி லைந்துகணைபோட்டீர்
ஈசனெற்றிக்கண்ணாலுமை யெரித்துவிடலாச்சே
இனிநானென்னசெய்வேனையோ என்தாலியும்போச்சே

கொஞ்சவயதினில்காணுனே கொள்ளைகொடுத்தேனே
கொடும்பாவிகாணிருந்தென்செய்வேன் குலயத்திற்றனே
பஞ்சைகளைப்போலேநின்று பரதவித்தேனே
பார்த்திபனைப்பிரிந்துடல் பதறுதடிமானே

பத்தியம்-இ-ம்-ஆனந்தபைரவி.

அன்னையைப்போலெனை யருமையாய்வளர்த்திடும்
என்னுடையபாங்கிகா ளியம்புவேன்கேள்
மன்னவனென்னுடைய மனதுக்கிசைந்தவர்
மருவியிருந்துமே வாழ்ந்திடாமல்
அன்னவர்மீதினி லைங்கணைதொடுக்கவே
அரனுதல்விழியினாலனலதாகக்
கன்னல்வில்லைங்கணைக் கனகமாமகுடமுங்
கனலதாய்போகவுங்கண்டேனிப்போ

அன்னமேயென்னுடைய அருகில்வாருஞ்
சொன்னசொல்தட்டியே துரைமதனெரிந்தார்
குன்னுதேயென்மனங் கோதைமாரே
மன்னனையெழுப்பியே வருவோம்வாரீர்.

தரு-இ-ம்-ஆநந்தபைரவி-ரூபக்சாப்புதாளம்

பல்லவி.

மன்னவா மன்மதா — யென்ன செய்குவேன் பாவி
மன்னவா மன்மதா

அநுபல்லவி.

தன்னோ நம்பினோரைக்கார்க்கும் — பன்னகசயனனீன்ற
தாயே யெனக்கிசைந்த — நாயகா ஆசைக்கண்ணுளா (மன்ன)

சரணங்கள்.

கள்ளியென் கண்ணீர் — பெருகுதே-அடியாள் மனங்
கலங்கிக்களையாய் — வருகுதே
துள்ளியே நெஞ்ச — முருகுதே-ஐயையே பாவி
துடித்தெனுள்ளமுங் — கருகுதே
புள்ளியரவந்தரித்த — தெள்ளியதோர் சிவன் மீதில்
அள்ளியே கணை தொடுத்து கொள்ளியைப்போலெரிந்திரோ (மன்ன)

வட்டமிடும் பூமி — தோறுமே-உமதுகணை
தொட்டிட ஆசைகள் மீறுமே- ஐயோ பாவி
கொட்டமிடுந்தென்றற்றேருமே-மீன்கொடியுடன்
பட்டுவிழுந்தீரோ பாரின்மேல்
கட்டிக்கரும்பேயென்னையும் — விட்டுப்பிரிந்தீரோ சாமி
கட்டியணைத்தேயெனக்கு — மட்டில்லாத ஆசைதந்த (மன்ன)

உண்டுவருமேகச் — சாயனே-இரணியன்றன்
உதிரங்குடித்த — வாயனே-
அன்றைவரைக்கார்த்த மாயனே. நீரீன்றெடுத்த
ஆசைக்கண்மணி — சேயனே-
மண்டுதணலதாக — வென்றுநான் செய்தபாவம்
உண்டோ யெங்கள் மீதிற்கோபம் — அன்றயனிட்டானோ சாபம் (மன்ன)

கந்தார்த்தம்-இ-ம்-தோடி-ரூபகசாப்புதாளம்

ஆடித்தெளிந்துபிறையோடுகங்கையழகான வேணிதனிலே
சூடித்திகழ்ந்தபரனோடுகந்து சுகமாகமலைமங்கையுங்
கூடிக்கலந்துமனமேகளிக்க கொந்தாருமலர்வாளியை
நாடித்தொடுக்கவுடிச்செறிந்த நலமானமதராஜனை
தேடித்தெரிந்துவாராய்-அடிப்பாங்கி
தேடித்தெரிந்துவாராய்.

தேடித்தெரிந்துவாரா — யோதியெங்கணுமோராய்
நாடியென்றன் முன்கூறும் — சேடியர்க்கரசே நீராய் (தேடி)

நாகசயனத்துறைவோனினி நாகத்தருமைத்தனையுந்தனி
வேகப்பரியாய்கிளியூர்வனை மோகக்கணையேதொடுப்பனை (தே)
நஞ்சிதலீலைகள்செய்துகொஞ்சியமதனுமிப்போ-வஞ்சியேபோய் (தே)
மிஞ்சிபுகழ்மன்மதனும்நஞ்சணிந்தகண்டனிடம்-வஞ்சியேபோய் (தே)
ஆவிசொந்தருகுறேனேபாவிபெண்ணையிங்கேவைத்து-மேவியேபோய்

கந்தார்த்தம்-இ-ம்சுருட்டி-அடதாளசாப்பு.

மங்களகல்யாணமதனவேளதன்னைப்
பொங்கரவலணிந்துபுரமூன்றெரித்த
கங்கைபணியீசன்கனலவிழியாலே.

அங்கசவேளங்கமெல்லாம் பொங்குசனலாயெரிய
எங்கேனபோய்மாண்டாரோடி கங்கைமாதே-எந்தன்சாமி
எங்கேபோய்மாண்டாரோடி கோகிலமே
திங்கள்மகரக்கொடியுந் தங்கமுடியுஞ்சிதற(எங்)
துங்கிதமயகுளமும் மங்களசூழமுங்கொண்டு(எங்)
செங்கண்மால்சுதனுமிப்போ கொங்கையார்படைவிட்டு(எங்)
அங்கனமாயென்னுடனே யிங்கிதமாய்வாழ்ந்திராமல்(எங்)
கூவியமொழியைக்கேட்டுத் தாவியிங்கேயோடிவந்து
ஆவியைக்காக்காரோடி கங்கைமாதே-எந்தன்
ஆவியைக்காக்காரோடி கோகிலமே

விருத்தம்.

சுந்தரஞ்சேர்முகங்கருகி ரூபம்வேறாய்த்
துரைமதவேளிறந்தவெனுஞ்சொல்லைக்கேட்டு
சிந்தைகெட்டுஅறிவழிந்துசிவனேயென்று
செந்தணல்மெழுகதுபோலுருகிமாது
அந்தரத்தின்குரலோசைகட்டிக்கூந்தல்
கலைந்துமண்ணிற்புரண்டுவிழுங்கலைகள்சோர
இந்தவிதிக்கென்னசெய்வேன்மதனேயென்று
இரதிமனங்கலங்கியலறியப்புவாளே.

தரு-இ-ம்-புன்னாகவராளி-ஆதிதாளம்.

பல்லவி.

இந்தவிதிக்கென்னசெய்குவேன்-ஐயோயினிமேல்
இந்தவிதிக்கென்னசெய்குவேன்.

அநுபல்லவி.

இந்தவிதிக்கென்னசெய்வே னென்பிராணனாதர்
சிந்தைகலங்கினேனே அந்தோகண்டபாவி(இந்த)

Page number incorrect

சரணங்கள்

கைபில்வளைகள் சோருதே-கதித்துமெய்ந்தனு
மெய்யுந்துயர மீறுதே
செய்பமலமொடுத்து ஐயன்மீதில்விடுத்து
மையல்விளைக்குமெந்தன் மாரன்ஜீரணமானர் (இந்த)
வேதன்விதித்த விதியோ-ஐயோஜக
காதன்செல்வித்த சதியோ
நீதமில்லாமல்சாமி கேமித்தனையரிக்கப்
பாதகஞ்செய்துமென்னைப் பாரிற்புலம்பவைத்த (இந்த)
மன்னாகனை நீரா-மாதர்கள்மோகக்
கன்னற்கிலேகொள் வீரா
சின்னவயதிற்றேடி பெண்ணையுமாலேசூடி
அன்னையிலலாதபிள்ளை தன்னைப்போலென்னைவிட்ட(இந்த)

கந்தார்த்தம்-இ-ம்-கண்டா-அடதாளம்.

வாகாயெந்தனருகாகவந்து வளமாயெவர்க்குமினிதாம்
பாகானவார்த்தையுளமேகளிக்கப் பகர்கின்றகாதிமார்காண்
மோகவிகாரமதையேவிளைப்ப முனைவாளிமலர்கொண்டுமே
மாகாளகண்டரிடமேசெரிக்க மதனன்றனைப்பிரிந்து.
ஓகோயினியென்செய்குவேன்-மாய்மொழிமார்களா
ஓகோயினியென்செய்குவேன
ஓகோயினியென்செய்வேன் மாகாதிபர்மொழியால்
வாகைவிற்கையினிற்கொண் டேகுமன்னனைமிக
வாடிப்புவி மீதடியுற்றிட தேடித்தெரியாமலேமுற்றிலு
மோடித்திரிகதேனிலைபெற்றிட சேடிக்குயிலே யடிசற்றுமே (ஓகோ)

கந்தார்த்தம்.

மதகஜப்பிலமும் வடிவல்குற்றலமும்
அதனமின்படையும் அம்புலிக்குடையும்
விதமுளதென்றலும் வெறுத்துயிர்விடுத்த

சுரு-இ-ம்-புன்னாகவராளி-ஆதிதாளம்.

மதனேநானென்னசெய்குவேன்-எந்தனுக்காசை
மதனேநானென்னசெய்குவேன்
மதனேநீர்போய்மாளும் விதமறிந்துசொன்னேனே
இதமென்றேயறியாமல் சதமென்றுபோய்மாண்டீர்(மதனே)
எந்தன்முகஞ்சோம்பி வாடுதே-மனமுங்கண்ணு
மெந்நேரமுமுன்னைத் தேடுதே
இந்துபோல்கண்கள்நீ சோருதே-நீர்மாலுஞ்சொரிந்த
தேதிகேட்டாலுங்கூட பாயுதே

கந்தமலர்மெத்தையின்மே லெந்தனைப்பிரியாமல்நீர்
தந்தகலவிகளைநினைந் துருகுறேனெமதனே (மதனே)

கந்தார்த்தம்.

தையலென்னுடனே சவுரியங்கூறிக்
கையினிற்கன்ல் காண்டீபமேந்தி
துய்யவெண்மேனிச் சோதிமேல்மலர்கொண்டு

தரு-இ-ம்-அசாவேரி-அடதாளம்.

ஐயோமதனே கணையெய்யப்போனீரோ-எனக்
காசைமதனே நீர் மோசமானீரோ
செய்யமலர்க் கணையைந்துந்
தீப்ந்தும்தா அனல் மேய்ந்துதோ (ஐயோ)
ஆவியெனக்குளமுன் றேடுதே-எந்தன்
அங்கமெல்லாம்நொந்து வாடுதே
பாவிதேவர் சொல்லைக்கேட்டும்
பட்டீரோவுயிர் விட்டீரோ (ஐயோ)
தேசுமலர்க்கணை வீரனே-எங்கும்
சென்றுமைபல்விளக்கு மாரனே
வாசவன்சொல் லாலேமோசம்
வந்துதேவுடல் வெந்துதோ (ஐயோ)
என்னிடத்தில்வீரங் கூறினீர்-இப்போவாரோனென்று
தென்றற்றேரி லேறினீர்
கன்னிகா னந்திரமாகக்
கண்டீரோவுயிர் விண்டீரோ (ஐயோமதனே)

வெண்பா.

அங்கசனைக்காணும லாவியுருகுதெந்தன்
மங்கையெனுங்காதிமானேகேள்-சங்கரன்மேல்
முல்லைமலர்க்கணையை முடுகித்தொடுத்துவிட்ட
வல்லபனைத்தேடியின்யேவா.

வெண்பா-கந்தார்த்தம்.

அங்கரூபிமங்கைபடை யம்புலிக்குடைகுளிர்தேர்
செங்கைவில்கரும்புகணை செண்டுமலர்-தங்கமுடி
சிதறிவிழக்கறிமாரன் சிவனுதற்கண்ணால்கருகப்
பதறுதாவியெனதுநெஞ்சம்.

தரு-இ-ம்-சங்கராபரணம்-ஆதிதாளம்

பார்சகி-மாரனைத்தேடிப்-பார்சகி
பார்த்தென்முன்வந்து- கூர்சகி

ஏரார்வானவர்கூடி யிசைத்தமொழியைநாடித்
தாரார்மலர்கொண்டோடித் தரிக்குமாரனைத்தேடி (பார்சகி)
சுழிநீர்சடையிற்றங்குந் தூயநுதலிற்பொங்கும்
விழியாலுடலமங்கும் வேள்மதன்றனைவெங்கும் (பார்சகி)
கோதிலாமுவுனந்துன்னுங் கொற்றவன்றனையும்வென்று
மாருகத்தென்றலின்று மதவேள்வாராரோவென்று (பார்சகி)
கொங்கலர்மாலைசூடிக் கோதையேமனங்கூடிச்
சங்கராபரணம்பாடிச் சகலதிக்கெங்குமோடிப் (பார்சகி)

விருத்தம்

மலைநிகர்கொங்கைமாது மன்னவன்றனைநினைந்து
கலையதுசோர்ந்துவீழக் கதறியேகலங்கியெந்தன்
சிலைமதனனங்கன்றானுஞ் சிவனிடஞ்சென்றுமாளத்
தலைதனில்விதியோவென்று தயங்கினாள்மயங்கினாளே.

கந்தார்த்தம்-இ-ம்-தன்னியாசி-ஆதிதாளம்,

கஞ்சமலர்வேதனும் கரியமாலீசனும்
வஞ்சியென்மலையில்வகுத்திட்டதறியேன்
பஞ்சமாபாவி- பதறுதென்னாவி
செஞ்சிலைமதவேள் சிவனிடம்போய்மாளகான் (பஞ்ச)
அனங்கனையிழந்தேன் கனமதுகுலைந்தேன்
அனம்வெறுத்தயர்ந்தேன் மனமதுமெலிந்தேனான் (பஞ்ச)
ஆசைக்கிசைந்தலீலா வாசவர்க்கனுகூலா
ஈசனெற்றிக்கனலால் நாசமானீர்தனலா (பஞ்ச)
மருவுமலரும்போலே மருவினேமுன்னாலே
இருஷிசிவனாலெந்தன் புருஷனையிழந்தேனான் (பஞ்ச)
தன்னியாசிபாடிச் சகிப்பேனோசேடி
மன்மதனைத்தேடி மயங்குறேன்வாடினான் (பஞ்ச)

கட்டளைகலித்துறை.

சீர்கொண்டெழிலைம்புனைந்திடுமாரனுந்தேவர்பதி
வீர்கொண்டுபோகமனந்துணிந்தேசிவனுதல்விழியால்
கார்கொண்டமேனியுங்கஞ்சமலருங்கருகிவிழ
வார்கொண்டபூண்முலையாள்ரதிதேவியுமவாடினளே.

இப்பதம்-இ-ம்-ஆனந்தபைரவி-சாப்புதாளம்.

கண்ணிகள்.

தெய்வமே-என்னையீந்த
தெய்வமே

துய்யமதிமுகமுஞ் செய்யமலர்க்கணையுந்
  தூளாயெரிந்திட்டாரோ தெய்வமே
சின்னஞ்சிறுவயதி லென்னையிந்தப்படிக்குத்
  தெருவில்விடநினைத்தார் தெய்வமே
கன்னற்சிலைபழகன் மன்னவனென்கணவன்
  கனலாயெரிந்திட்டாரோ தெய்வமே
வந்தயிடர்தனிலேயிந்தவிதியெனக்கு
  வருமென்றறிகிலேனே தெய்வமே
சொந்தமுடனழைத்து இந்திராதிதேவருமமை
  சூதாமடித்திட்டாரோ தெய்வமே
ஆசைமொழியுரைத்து மோசமாய்த்தானழைத்து
  அனலாயெரிந்திட்டாரோ தெய்வமே
ஈசனுதல்விழியால் நாசமாயெரிந்தீரோ
  யென்னசெய்வேனையோ தெய்வமே

விருத்தம்

பண்டுசெய்வினையால் அண்டர்சொற்கேட்டுப்
  பரனிடம்போனவென்மதனே
என்றுநான்காண்பே னீசனேதஞ்சமென்
  றேங்கியேமதிமுகஞ்சோம்பி
நின்றவள்காரத்தால்வயிற்றினிலறைந்து
  நிலத்தினில்சோபமும்பெழுந்து
அன்றயனமைப்பையின்றுநான்வெல்ல
  லாகுமோவென்றவளழுதாள்.

தரு-இ-ம-புன்னகவராளி-ஆதிதாளம்.

பல்லவி-

ஆசைமதனே.மோசம்போனீரோ-என்
ஆசைமதனே-மோசம்போனீரோ

அனுபல்லவி

வாசவன்சொல் நேசமென்று
ஈசன்மேல்கணைதொடுக்க நாசமாயெரிந்தீரோயென் (ஆசை)

சரணங்கள்

அங்கமெழுகா யுருகுதே-என்
ஆவிசொந்துவிசனம் பெருகுதே
திங்கள்வதனமும் வாடுதே-என்
சிற்றிடைதள்ளாடி நோகுதே
இங்கிதமாயிருபேரும வங்கணமாய்வாழ்ந்திராமல்
கங்கைதரித்தஈசனுதலிற் பொங்கும்விழியாலெரிந்தீர் (ஆசை)

இசகுயில்லியல்மலரைப் பூட்டி-அந்த
இமையோர்மொழியையுங் கேட்டீர்
நக்கன்மயல்கொள்ளவும் மாட்டி-நீர்
நமன்பதிக்கேகிவே விட்டீர்
மக்கமாதர்படைகள்சூழ எக்காளங்குயில்கள்கூவ
இக்குவலயந் தனிலே மக்கிமன்னுப்மடிந்தீர் (ஆசை)
புன்னாகவராளி பாடியே.என்
போர்மதவேள்தனைத் தேடியே
கன்னிமனதுருகி வாடியே-நான்
கலங்கிக்கண்ணீராருய் ஓடியே
பண்ணியபலனிதுவென் றெண்ணியேமனஞ்சலித்து
அன்னம்போற்புலம்பவெங்கன் மன்னவாமடிந்தீரோ (ஆசை)

தோழிசொல்-விருத்தம்.

அம்மணிதாயேநீதானழுதுமேகதறவேண்டாஞ்
செம்மையாய்மதனராஜன் சீக்கிரம்வருவாரம்மா
நன்மையேநமக்குண்டாகு நறுமலர்ச்சயனந்தன்னில்
கொம்மைசேர்முலையினுளே கோதைகண்துயிலுவாயே.

இரதிதேவிசொல்-விருத்தம்

துயிலுமென்றுரைத்தமாதே சொல்லுவேனதனைக்கேளாய்
மயல்கொளச்செய்யுமாரன் மயேஸ்பரனிடத்திற்சென்று
நயகுணவானெரிந்து நசித்திடக்கேட்டெனுள்ள
முயிர்தடுமாறிச்சோர்ந்து வருந்தியேபுலம்பலுற்றேன்.

இதுவுமது.

என்றைக்குக்காண்பேனே னுமென்னுயிர்ப்பிராணனுதன்
இன்றைக்குவாராவிட்டா லிவ்வுலகத்திலபாறும்
நின்றுயிர்தரிக்கமாட்டே னிமிஷத்திலமாள்வேனென்று
கன்றைதப்பிரிந்தஆப்போல் கதறினள்பதறினளே.

கந்தார்த்தம.

முன்னவன்செய்தநீதி முறையெவரிடம்போய்ச்சொல்வேன்
என்னதுபாங்கிமாரே யிறைவனைக்காண்பதெப்போ

நிபதை-இ-ம்-நீலாம்புரி-ரூபகதாளம்.

கண்ணிகள்

என்னகாரணமோ-என்பிராணனுதன்
இறந்தவகையறியேன்
அன்னமே[illegible] ஆவியிழந்தாரோ
சொன்னசொல்மற[illegible] சுடரிலெரிந்தனரோ
மூன்னமேவேதன்-விதி[illegible] முறைப்படியோவறியேன்

கும்பிடசித்தோர்க்கு-அன்னங் கொடாமற்புசித்தேனே
நம்பிவந்தோர்களை-நான் நட்டாற்றில்விட்டேனே
தும்பியுன்னுந்தேனை-கைக்கொம்பால்நான் தொட்டுக்கலைத்தேனே
சம்படியார்மொழியை-நான்பாவி தடுத்துமறுத்தேனே
அரிபூசையைமறந்து-அஞ்ஞானத்தி லதிவசைகொண்டேனே
புரிபூசையையழித்து-எல்லோர்க்கும் பொல்லாங்குசெய்தேனே
சராசரிபோகங்களை-நான்பாவி தடுத்துமறுத்தேனே
நரிவாசிக்குவித்த-சொக்கலிங்க நாதன்செயலறியேன்
சென்மேலர்கள்சூடி-எனையொத்த ஸ்திரீகளிடசேர்வதெப்போ
கொன்றைமலர்கள்சூடி எனையொத்த சோதையைசசேர்வதெப்போ
தண்டிகைமீதேறி-நாதனுடன் சாரிசெய்நாளையிலே
மூண்டையெனும்பேர்தான்-வந்ததிது முன்னாள்வினைப்பயனே

தோழிசொல்-விருத்தம்.

வினைப்பயனென்றதாயே விசனநீயடையவேண்டாம்
அனைத்தையுங்காக்குமுக்கண் அண்ணலார்கிருபையாலே
புனைபணியாவும்பூண்டு பூமுடித்தலங்கரித்து
நினைப்பினில்மகிழ்ச்சிகொள்வாய் நீயென்பினெழுந்துவாராய்.

தோழிசொல்-தரு-இ-ம்-சௌராஷ்டகம்-ஆதிதாளம்

பல்லவி.

எழுந்தென்பின்வாராய்-இரதிதேவி
எழுந்தென்பின்வாராய்

அநுபல்லவி

அழுந்துமொழியானந்த ஆயிரங்கண்ணனையுஞ்
செழுந்தாமரையானையுஞ் சென்றறிவாய்நீயே (எழுந்)

சரணங்கள்,

காமன்தொழிலுக்குமுக் கண்ணன்கோபிப்பதுண்டோ
பூமனுலையும்பொய்யோ புலம்பவேண்டாமம்மா (எழு
நாரதன்பகையாலல் நம்மையென்னசெய்வான்
மாரமேன்பாரயேன்முக்கண் பதிநாணமக்குண்டு (எழு)
பூமிப்புழுதியில் புரண்டழுததாலென்ன
கேமிக்குமதன்சென்ற நினைவறிவிக்கலாம் (எழு)
சிறந்தொண்டன்பிள்ளையைத் திரும்பியழைக்கலேயா
மறந்தென்றும்பிறப்பிலான் மலரடிநமக்குண்டு (எழு)
உருவிலிட்மையாரோ
திருவிலுமெழிலாளே உனக்கேன்சந்தேகம்விடு
திருவிலுமெழிலாளே சிந்தைகலங்கவேண்டாம் (எழு)

கந்தார்த்தம்-இ-ம்-முகாரி - அடதாளம்.

திருவிலுமெழிலான் தேகம்வேறுகி

உருவிலியிறந்தபி னுருகியேபுலம்பி
வருகிறாள்ரதிப்பெண்ணாள்-வாசவன்சபைக்கு
வருகிறாள்ரதிப்பெண்ணாள்
உருவிலிதனைநினைந் துருகியேபுலம்பி (வருகிறாள்)
நாரதமுனிவன்மேல் நகுபழிகூறி
நந்தனோடரவிந்த நாதனைத்தூற்றி
வாரணப்பரியேறிந்திர வாசவன்முன்னேறி
மாரனையுயிர்பிழைக்க வைத்திடக்கோறி (வருகி)
வரிவிழிப்புனல்ஸ்தன மலைவழிந்தோட
மதனன்மேல்நினைவதாய் மனமதுதேட
திரிபுரநகைத்தெரித் தவன்முன்னேநாட
திதில்லாத்தோழி மாருடன்கூட (வருகி)
பாங்கியாதாவுடன் பழமொழிகூறி
பரிந்துமாதவனைக்கண்டு பண்புடன்தேறி
வாங்குமாமதிமதன மாசுமேலாடி
மாபுவியில்விழுந்து கூவிமதனைத்தேடி (வருகி)

விருத்தம்

வந்தபினிரதிதேவி வாசவன்சபையில்நின்று
கொந்தலரிலஞ்சிமாலைக் கொழுனனைக்கொன்றபாவி
இந்திரனையிசைவின்றோ யென்பழியோர்ககீங்கள்
தந்திரஞ்செய்தீரென்று தான்சொலிப்புலம்புவாளே.

இரதிதேவி - தேவர்கள்முன்னே புலம்பல்

கந்தார்த்தம்

சுகமதவேளைச்சோதிமுன்னனுப்பி
அகமதுமகிழ்ந்த ஆயிரங்கண்ணா
மகபதி தேவர்களோ-மதன்மேல்
வர்மமோ தேவர்களே
ஜகமதில் தேவர்களே-மதன்மேல்
சங்கையோ தேவர்களே
சுகமதவேளுக்குத் துணிவுகொடுத்துநீங்கள்
வகைமோசமாகவே மடிந்தீர்களோபாவி (மகபதி)

கந்தார்த்தம்

[illegible]செப்புமாரனைத்
தந்திரத்துடனே [illegible]
இந்திரதி [illegible]வேள்
என்செய்தார்தேவர்களே

சரணங்கள்

துயிலுங்கைக்கோலாலிலையா ஆலிலையா-பின்னுஞ்
சுரர்மெதாழுமாலவனை யுடையபாலிலையா (என்னசெய்)
பாண்டவரைவர்சகாயா சகாயா-இந்தப்
பாரெங்குமோரடி யளந்தபொன்மாயா (என்னசெய்)
கோவர்த்தனகிரியின்குடையா கிரியின்குடையா-மதனன்
கொஞ்சியெனையணைய வாவரங்கொடையா (என்னசெய்)
குளெபதைதுயில்வளர்த்தாயே வளர்த்தாயேஅரியென்ற
சுதனுக்காயிரணிய னுடல்பிளந்தாயே (யென்னசெய்)
முன்னவர்சாபந்தீர்ப்பாயே தீர்ப்பாயே-மதனன்
மூளைத்தெழும்படியுந்தன் கடைக்கண்பார்ப்பாயே (என்னசெய்)
அன்னவர்க்குயிர்கொடுப்பாயே கொடுப்பாயே-அபன்
அனைமத்தபடியென்றுலு மைதக்தடுப்பாயே-(என்னசெய்

இரதிதேவி-பிரமன்முன்னேபுலம்பல்.

கந்தார்த்தம்

மதுமலர்வாளி மன்மதவேளின்
முடிதனிலெழுதிமுடித்திடும்வேத
சதுர்முகப் பிரமாவே-தீர்ந்த
சாபத்தை பிரமாவே
முதிர்மொழிப் பிரமாவே-இன்று
முடித்திரோ பிரமாவே
கதிர்மாகதப்பச்சைக் காந்தியுடையநல்ல
புதியமன்மதவேளைப் பிழைக்கப்புகலுவாயே (சதுர்)

இரதிதேவி-நாரதர்முன்னே புலம்பல்.

கந்தார்த்தம்

வடிவழும்வணமுள மாரனைக்கொல்ல
கொடிதனியகோள்களை நுவலியபாவி
குடிகேட நாரதனே-மதன்மேல்
கோள்சொல்லும்நாரதனே
அடியற்ற நாரதனே-நிலையில்லாமல்
அலைவாய்நீ நாரதனே
முடியுஞ்சடையுஞ்சாய்ந்த முனிவரிற்சேராமல்
கொடியுள்வயிற்றெரிச்சலு குலையிப்பற்றியெரிவாய் (குடிகே)
[illegible] நாரதனே-இருடியர்
குலங்கெட நாரதனே
அலைபற்று நாரதனே [illegible]டையைக்
கட்டிய நாரதனே

இலையுங்கிளையுமற்று ஈடழிந்தவனேயென்
தலைவனுக்கழிவிட்ட சண்டாளதுரோகி(குடிகே)

பொதுவிருத்தம்.

ஆயிரங்கண்ணன்விண்ணோர் அயனரிமுனிவர்முன்பு
பேய்முறையிட்டுநோகும் பூவைபாளிரதியான
நாயகிதன்னைத்தேற்றி நலஞ்சொலிதேவர்தாமுந
றூபவன்றிருக்கல்யாணந் றுவக்கினர்பின்புதானே.

தேவர்கள்சொல்-விருத்தம்

தானவனனையீசன் தயவுறநாங்கள்சொல்லி
ஈனமில்லாமனுக்க னெழில்மங்கில்யஞ்செழிக்க
ஆனவனுமையும்போல அருகினிலிருந்துவாழுக
மானெனுமிரதிகேளாய் மதனனையெழுப்புவோமே.

தேவர்கள்சொல்-தரு.

இ-ம்-கல்யாணி- ஆடதாளம்.

பல்லவி.

எழுப்பியேதருகிறோம்-பொறு-பொறு
இஞ்சொல்ரதிதேவி யஞ்சாதே

அநுபல்லவி.

மழுப்பித்தனிட மாகவேசொல்லி
மங்கைப்படைமத னங்கஜவேளை

சரணங்கள்.

தேவர்கள்யாவருங் கூடிச்-சிவன்வளர்
தென்கைலைப்பதி நாடி
மூவர்முதற் முறைமக்குந்திருக்கல்யாண
முகூர்த்தங்கள் தேடி
ஓவியமங்கில்ய தாரணமானபின்
உச்சிதமச் சத்துவஜனை (எழுப்பி)

விருத்தம்.

எழுப்புவதாக விசைத்தசொற்கேட்டு
முழுப்புண்டரீக முகமதுமலர்ந்து
செழிப்பதாய்நின்று திருவினைப்போல
வழிப்புகளிலாமற் பதிபுகுந்தனளே.

இதுவுமது.

புகுந்திடவிரதி பொன்னகர்விண்ணோர்
முகுந்தனுமயனரி முனிவர்நூசாருக

தருந்திசியொடு சார்ந்தகார தருந்
தொருந்திரளாகத் தோன்றிடச்சென்றே.

இதுவுமது.

சென்றிமைமலைமகள் திருக்கலியாணம்
மின்றெனக்கூறி யெழிலமண்வளையும்
மன்றல்சேர்புஷ்ப மலர்ந்தமண்டபமுங்
குன்றெனப்பாக்கிலை குவிந்தெடுத்தனரே.

இதுவுமது.

எடுத்துமேதெய்வ வேதியர்க்களித்து
அடுத்திடுமற்ற யாவர்க்குங்கொடுத்து
தடுத்திடாக்கந்தஞ்சாந்துகள்பூசி
கொடுத்திடும்வாசக் குழல்மலர்முடித்தார்.

இதுவுமது.

முடித்திடுந்தேவர் முதல்வனுமீசன்
அடித்தடங்தேடு மயனரியமரர்
நடித்திடும்மயிலை நாதருக்குமைக்குங்
குடித்தனத்திருக்கல் யாணங்கோலினரே.

பிரமதேவர்சொல்-விருத்தம்.

வல்லவர்திருக்கல்யாண மகோற்சவமுகித்தேயந்த
அல்லறுகுழலாளுக்கு மன்புடன்மாலைசூட்ட
நல்லதோர்முகூர்த்தமிந்த நாழிகையாதலாலே
செல்லுமுன்கிருபைசெய்து தேவரீரொழுந்திடீரே,

பொதுவிருத்தம்.

அந்தணனுரையைக்கேட்டு அரன்மணக்கோலம்வந்து
முந்தவேயலங்கரித்த முகூர்த்தமண்டபத்தில்வந்தார்
சுந்தரியுமையாள்தானுந் துலங்கிடும்பணிகள்பூண்டு
வந்தானிடப்பாகத்தில் மகிழ்ந்துமேயிருந்திட்டாளே.

சிவன்சொல்- விருத்தம்.

பருப்பதராஜனே நீ பாரியாளுடனேநின்று
இருவருமனமகிழ்ந்து யெந்தனுக்குமையாள்தன்னை
தருகுவேனென்பதா[illegible] தாரைநீர்வாருமிந்தப்
[illegible] பெற்றுமேவாழ்வீர்தாமே.

[illegible]-விருத்தம்.

[illegible]லயடியேன்முன்னாள்
[illegible]தமக்குயெந்தன

தையலாளுமையைக்கன்னி தானமாயளிக்கப்பெற்றுன்
கையினில்தாரைவார்த்தேன் கடவுளேமணஞ்செய்வீரே.

பொதுவிருத்தம்,

தாரைநீர்வார்த்தபின்பு சதுர்முகன்வேதமோதச்
சேரஓமங்கள்செய்து தேவதுந்துமிகளார்ப்பக்
கூரமங்களங்கள்தேவர் கோதைமார்புகழுமீசன்
வாரணியுமையாளுக்கு மங்கில்யந்தரித்திட்டாரே.

தரு-இ-ம்-அசாவேரி-ஆதிதாளம்.

பல்லவி.

சிவசங்கரனுருக்குத் தேவியுமையவட்குத்
திருக்கல்யாணஞ்செய்தார் தேவர்கள்கூடி.
திருக்கல்யாணஞ்செய்தார்.

அநுபல்லவி.

நவசங்கணிந்தமாலும் நான்முகப்பிரமாவும்
கவசங்கரவிந்திரன் கரந்தாங்கியேநிற்கத்
துவசங்கத்தொனிதெய்வ துந்துமிகள்முழங்கத்
துடியதிர்தலுமண்டத் திடியெனவேவிளங்க (சிவ)

சரணங்கள்.

தவமுறுவேதியர் சிவசிவசிவவென்னச்
சாஸ்திரவேதஓமங்கள் ததிததிததியென்ன
பவமறவடியார்கள் ஹர ஹர ஹரவென்னப்
பண்ணவர்கின்னரர் நமநமநமவென்ன
நவரத்தினமணிப்பணி நகநகநகவென்ன
நாளதுதிருவோணம் சுபசுபசுபமென்ன
கவனவேள்விமிலமுல் திகுதிகுதிகுவென்ன
கயிலாசம்வைகுந்தம் பொன்னுலகமுந்துன்ன (சிவ)

விருத்தம்.

துன்னவேமணக்கோல மீசனுஞ்
சோதியுமையுடன் கூடித்துலங்கும்போது
பொன்னுலகாளிந்திராதிதேவர்யாரும்
புதுமணக்கோலச்சிவனுர் [illegible]
தென்னிமவானரியரு மருகிலிற்கத்
திருக்கலியாணசிவனுராசிர்வாதஞ்
சொன்னவுடன்தெய்வ[illegible]கூடித்
துய்யரதி[illegible] தொழுதாரமே.

இதுவுமது.

தாமதமில்லாமலரி மனைவிவாணி
சத்தகன்னியுடன்ரதியுஞ் சரணஞ்செய்ய
சோமசேகரனவர்க ளியாவருக்குந்
துய்யசுபதீர்க்க மங்கிலியஞ்சொல்லத்
தாமரைக்கண்டிருமாலும் வேதனிந்திரன்
சத்தரிஷிதேவர்களுஞ் சமயம்பார்த்துப்
பூமன்மனையிரதியிவள் விதலைக்கையோ
பூரணசுமங்கிலியம் புகன்றதாலே.

இதுவுமது.

காலமதிற்கொடுத்தவரந் தாழ்வுறாமல்
சங்கரனைபங்கசமேவன் றனையுண்டாக்கக்
கோலுவதேசீநிகளாமென்றுதேவர்
கோமானைபடியணைந்திக் கூறும்போது
பாலவிழியழலதனா லங்கங்குன்றிப்
பட்டமதன்றனையெழுப்ப லாகாதென்று
நீலகண்டனுமான நினைத்தேயின்னும்
நிஷ்டையதையாலோசித் திருந்தாரன்றே.

இதுவுமது.

இருக்கவுந்தேவே யிரதியாயகியாள்
பெருக்கியசுயமங் கிலியெனப்பேச
உருக்களுமுண்டோ ஓதினீர்சுவாமி
மருக்கமழ்படியே மனதுசெய்வீரே.

இதுவுமது.

மனதுசெயயென்று யாலயனிந்திரன்
தனதுடன்கேட்கத் தனிமுதலீசன்
என்துக்கண்டழலா லெரிந்ததுசேவீர்
மூனமொருவர்க்கு முனிபுரிந்ததுவே.

இதுவுமது.

புரிந்ததுச்சபம் பொறிபடத்தானே
யெரிந்துடல்மதவேள் வெந்திடும்படியாய்
தெரிந்திடும்பிரம [illegible]வனுஞ்சபித்தான்
[illegible]ந்ததுதானே.

இ[illegible]மது.

[illegible]ட்டமர்த்திர
[illegible]

தேனெனுமொழிகள் மாறித் திகைத்துடலுருகிவாடித்
தான்வாழ்திருக்கல்யாணக் கடவுள்முனலங்குவாளே.

இரதிதேவி-சிவன்முன்னே புலம்பல்.

தரு-இ-ம-கன்னடா. ஆதிதாளம்.

கண்ணிகள்.

தெய்வமேயிப்படி கருச் செய்வதுதர்மமோ
திருக்கல்யாணநாதா
ஐயையோநாமொரு பெண்பிறந்தகொடுமை
அநியாயமநியாயம்
செய்யமலனாமாரன் நெளிக்கத்தியாக்கினீரே
திருக்கல்யாணநாதா
ஐயமில்லாமலன்று வேடன்காலாலுதைக்க
அன்புவைத்தாயே தெய்வமே
கையாற்கந்தமல ரெய்தவேளைத்தீயாய்க்
கண்டகாரணமென்ன தெய்வமே
செய்தவினையும்வந்து சேர்ந்தசாபமுமுந்தன்
சித்தமறியாதுண்டோ தெய்வமே
வையகந்தனில்தொண்டன் மதலைதனையுமுண்ட
கர்மமோ அறியேனே தெய்வமே
மையாரலைத்தரித்த பாவனைமனதிரங்கிப்
பார்த்திடவேணுமெப்பும் தெய்வமே.

பொதுவிருத்தம்.

தெய்வமென்றிரதிதேவி சிந்தையிற்றுயரமுற்று
மைவிழிகலங்கியேங்கி வாடியேபுவியில்வீழ்ந்து
கைகளுஞ்சோர்ந்துசிந்தை கலங்கிக்கல்யாணநாதா
செய்ததிவ்வினையோவென்று சிவனடிதனில்வீழ்ந்தாள்.

இதுவுமது.

இப்படி துயரமுற்ற எந்திழைரதியாள்தானும்
அப்பணிசடையர்பாத மலரிணையுநீங்கிமெத்த
கற்பெனுமுமையாள்தன்னைக் கண்டவள்பணிந்துபோற்றி
ஒப்பிலாத்தாயேயென்று உருகியேபுலம்புவாளே.

இரதிதேவி-உமையவள்முன்னே புலம்பல்.

கந்தார்த்தம்-

அங்கயற்கண்ணி யாமளை சத்தி
மங்களரூபி மயேஸ்வரி [illegible]ன்மணி

சங்கரிடப்பாகமமர்ந்த தாயேவுமையவளே
மங்கிலியப்பிச்சையெனக்கு யடிப்பிச்சைதந்தாட்சி
மங்கைமட்டுவார்குழல் மால்தங்கையேயெந்தன்
அங்கசவேளுக்குயி ரளித்துயெழுப்புமின்று (மங்கில்)
ஏழைக்கிரங்கு வாயே-என்னைப்பெற்ற
ஈஸ்பரியென் . தாயே
மாளவய தலைவே-மதவேளை
மானிலந்தனிற்கொல்லவே
காலை மீதேறமுந்தன் கணவனுக்கிப்போது
தாளவுரைத்துயெந்தன் றலைவனையெழுப்புவாய் (மங்கில்)
தலைவன்செய்தீமை யென்ன-ஐயோநீங்கள்
சாம்பலாயெரித்த தென்ன
மலைவேடனுதை யுண்டு-நீங்கள்
மகிழ்ந்துமிருந்த தென்ன
நலமோவுங்களுக்கிது நான்படுந்துயரங்கள்
குலமுழுதும்பற்றிக் கொண்டெரியுமேயிப்போ (மங்கில்)
கொண்டமன்னனை யிழந்தேன் நான்பாவி
குலைபற்றியெரிந்து நொந்தேன்
இன்றுமிண்டான வார்த்தையால்-ஏழைதனை
சிதறவடித்துரைத் தேனே
கண்டதையில்லையென்று காசினியிலுரைத்த
தெண்டனையோயித தீவினைக்கென்செய்வேன் (மங்கில்)

விருத்தம்.

அன்னையேயுன்னையல்லா லவனியிற்கதிவேறில்லை
உன்னதுமனமிரங்கி யொளிபெருஞ்சிவனுருந்தன்
மன்னவர்தமக்குச்சொல்லி மண்ணிலேயெரிந்துமாய்ந்த
என்னதுகணவன்றன்னை யெழுப்புவாய்சரணமம்மா-

உமையவள் சொல்-விருத்தம்.

மாதவஞ்செய்துபெற்ற மகளெனுமிரதியேநீ
ஆதரவில்லையென்று அஞ்சியேதவிக்கவேண்டாம்
[illegible]யகன்றன்னையிப்போ
[illegible]ழ்ந்திடாயே.

[illegible]சால்-விருத்தம்.

வசனம்.

அகோ சரண்ஞ்சரணையையாகுவாமிதேகரீர் திருவுளப்படியே தங்கள் கமண்டலத்து ஜலத்தைத்தெளித்து மகிமைபொருந்திய பஞ்சாக்ஷரத்தையோதி மாரனை எழுப்பிவருகிறேனையாசுவாமி.

பொதுவிருத்தம்

அஞ்சுபஞ்சாக்ஷரத்தி லமைந்திடும்பொருளின்மேவு
மிஞ்சிடும்சுவாநிஷ்டான விளக்கொளிமவுனத்தாலே
உஞ்சிதவுயிரொழுத்தை யுச்சரித்துருவுண்டாக்கக்
கொஞ்சிமுன்போலேமாரன் கொப்பெனவெழுந்திட்டானே.

இதுவுமது.

சவுமியசங்கன் தான்செயும்வேள்வியில்
உவமையில்லாத வுருவெனவந்த
தவமிகுமிரதி தனக்குமுன்போல
சிவதபவால்மதன் செனித்தெழுந்தானே.

தரு-இ-ம-சங்கராபரணம்-அடதாளம்.

ஜெனித்துதேமதனுமுன்போல்-சிவ
திருக்கல்யாணகாத னன்பால்
இனித்தலமதி லெவ்வுயிர்க்கு
மிச்சையேற்கவுங் கற்பமர்க்கவும்
தனித்ததாமரைமலர் வாளிதனுசேந்தி
சம்மாரதிமன தின்பங்கொள்ளவுலகில் (ஜெனித்து)

விருத்தம்.

ஜெனித்தவன்கையிற்கன்னற் சிலையுமைங்கணையுமேந்தி
குனித்திடுமணிவண்டின் குளிரிசைப்பண்கள்பாட
இனித்ததோரிதழினூர்த மெழிற்படைபுடைகள்சூழத்
தனிச்சிவனருளாற்காமன் றரணியிற்றன்வந்தானே.

தரு-இ-ம-காம்போதி-அடதாளம்.

பல்லவி.

வந்தானேவிக்கையதா யிந்தவுலகிலுதித்து
வந்தானேயெங்கள்துரை மன்மதராஜன்

அநுபல்லவி.

செந்தாமரைத்திருவின் தந்திடும்பாலகனென்று
மந்தாமாருதத்தேரி ... லந்தமாகவேயேறி (வந்தா)

...ணம்.

...ரக்கொடியுந்தென்றல்
... சாரதிவசந்தனேடு





பாரிலஞ்சிமாலையாலும் பேரிகைக்குமாதர்படை
கார்நாணிவில்லைக்காட்டிக் கூர்முல்லையங்கணைபூட்டி (வந்தா)
சுந்தராதிக்குருவங் தோற்றவுமுலகோர்க்கெல்லாஞ்
சிந்தையில்நோக்கவுஞ்சாம்ப சிவனருள்பெற்று
தந்திரியோர்டெறும்புகடை யாவுக்குமோகம்விளைக்கச்
சம்பிர்மாதியுட னின்பமுடன்விளையாட (வந்தா)

விருத்தம்.

ஜெனித்தபின்மதனராஜன் றிருவுருவிரதிகண்டு
மனத்திடங்கொண்டுநல்ல வார்த்தையுஞ்சுகம்போற்பேசி
தனத்தினில்மருவிச்சேரச் சப்ரமஞ்சமீது
இனத்துடன்லீலைசெய்யஇரதியுமழைத்திட்டாளே.

இரதிசொல் - பத்தியம்.

அதிரூபசித்திரனே அழகியகுணாளனே
அதரத்தில்வடுப்பட வமைப்பதழகோ

மன்மதன்சொல் - பத்தியம்.

துதிசேர்புகர்ப்புயத் தோகையேஆவலாய்
தொண்டையங்கனியெனச் சுவைத்ததுவே
(இரதி) மதியாவசீகர மலராம்புயனஞ்
வரைமுலைநகக்குறி வரைந்ததழகோ
(மதன்) புதியதெள்ளமுதெனம் புகல்விர்சகோரமாப்
புன்னைகைக்குறி புதைத்ததனமே
(இரதி) வள்ளலேயினதுசெவ் வாயினமுதச்சுருள்
வெள்ளிலையருந்தியே மேவுவாயென்
உள்ளெல்லாமுலவிய உவப்பொடுந்திகழ்
கள்ளறுமலரணை கலந்துமருவ

தரு - இ - ம் - சங்கராபரணம் - ஆதிதாளம்.

வாடாமன்மததுரையே - அருள்வாய்கனி
வாயிதழ் சர்க்கரையே
கோடானுகோடிபண்டை சோதையர்புடைசூழ
கொட்டமிடுமென்னுசை கட்டழகாயென்கிட்ட

மதன்சொல் - தரு.

மையல்விலக்குமரதியே - என்னுடன்கொஞ்சி
மருவுவாய்பெண்பதியே
தையலேசெளமியன் தலைதாகரியெய்கன்
மெய்யிற்பாதியாகிய விண்ணொளியேகண்ணே (மையல்)